

# கம்பன் விழா மலர்

கம்பன் கழகம், சென்னை

1976

# கம்பன் விழா மலர்




---

*1976 ஆகஸ்டு 14, 15 தேதிகளில் நிகழ்ந்த*
*கம்பன் விழா*
*இரண்டாம் ஆண்டு வெளியீடு*

---


கம்பன் கழகம்

795, அண்ணா நகர் :: சென்னை-600 040

# கம்பன் கழகம் — சென்னை

## குழுவினர்: 1976

| | | |
|---|---|---|
| தலைவர் | — | ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயீல் |
| துணைத் தலைவர்கள் | — | ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் |
| | | ஏ. என். சிவராமன் |
| | | ஏவி மெய்யப்பன் |
| செயலாளர் | | மு. அழகர்சாமி |
| பொருளாளர் | | பழ. பழநியப்பன் |
| உதவிச் செயலாளர் | — | தெ. ஞானசுந்தரம் |
| உறுப்பினர்கள் | — | டாக்டர் திருமதி இந்திரா சோமசுந்தரம் |
| | | கம்பனடிப்பொடி (சா. கணேசன்) |
| | | எம் எஸ். கோபால் |
| | | அ. ச. ஞானசம்பந்தன் |
| | | கி. வா. ஜகந்நாதன் |

---


அலுவலகம் :

செயலாளர்

கம்பன் கழகம்

795, அண்ணா நகர்

சென்னை-600 040

தொலைபேசி எண்:
613275

# முன்னுரை

1975 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 9, 10, 11 தேதிகளில் இக் கழகம் நடத்திய முதற் கம்பன் விழா சிறந்த வெற்றியைப் பெற்றது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இந்த மகிழ்ச்சி எங்களுடைய பொறுப்பினை மேலும் வலியுறுத்தி, வருங்காலத்தில் இதே வெற்றி தொடர்ந்து கிடைக்குமாறு செய்ய வேண்டுமே என்ற அக்கறையையும் உண்டாக்கியிருக்கிறது. என்றாலும் பொதுமக்கள் எங்களுக்கு அளிக்கும், அளித்த, அளித்துக் கொண்டிருக்கும் ஆதரவும் ஒத்துழைப்பும் எங்களுடைய பொறுப்பினை இலகுவாக்கும் என்ற நம்பிக்கையும் எங்களுக்கு இருக்கிறது. கம்பன் தமிழகத்தின் தலைநகராகிய சென்னைக்கு வந்து காலூன்றிவிட்டான். அவனை, சென்னையில் நிலைநிறுத்தி, தலைநகரத்திலிருந்து தொடங்கும் அவன் புகழ், தமிழகம முழுவதும்—ஏன் தமிழ் கூறும் நலலுலகம முழுவதும்—பேரொளி பரப்பி, அவன் காப்பியத்தைப் படிப்போர் உள்ளத்தில் இன்பத்தைக் கொட்டி மண்டச் செய்வது இக் கழகத்தின நிரந்தரப் பணியாகும். தமிழ் மொழியில், வேறு எந்த மொழியிலிருக்கும் காப்பியத்திற்கும் பினனிடாத பாரகாப்பியத்தைப் படைத்த அம் மாபெரும் கவிஞனுடைய பேரும் புகழும் மங்காமல் என்றும் எங்கும் பரவும்படியாகப் பார்த்துக்கொள்ள வேண்டியது தமிழர்களுடைய கடமை மாத்திரம் அல்ல, அவர்களுடைய பெருமையும், பேறும் ஆகும்.

உங்கள் கைகளில் இப்போது தவழும் இந்த மணம்விரி மலர் ஓராண்டே நிரமபிய சென்னைக் கம்பன் கழகத்தின இரண்டாம் கம்பன் விழா மலர். கற்போருக்கு இனித்திடும் கம்பனின் காப்பியம் தரும் தெவிட்டாத இன்பத்தை உங்கள் அனைவரோடும் பகுத்து நுகர்வதே இக் கழகத்தின் தலையாய நோக்கம். அந்த நோக்கததின் முதறபடியாக ஒரு பெருமபொறுப்பை இக் கழகம் ஏற்றுக் கொண்டது. கம்பனுடைய இராமாயணம் படிக்கும் ஆவலுள்ளவர்களுக்கு நூல் கிடைக்காமல் இருந்தது பெருமகுறையாகும். சந்தி பிரிதது, பொருள் விளங்குமாறு மிக அருமையாக எஸ். ராஜம் அவர்கள் பதிப்பித்த பதிப்பின் பிரதிகள் கிடைக்காமற் போய்விட்டன. இந்த நிலையில் கம்பனுடைய காப்பியத்தின்

புதிய பதிப்பு ஒன்றை வெளிக் கொணர்வது கம்பன் புகழைப் பரப்பும் முயற்சியின் முதற்படியாக அமைந்தது. இதற்கான திட்டம் ஒன்றைச் சென்னைக் கம்பன் கழகத்தின் செயலாளர் திரு கி. மு. அழகர் சாமி அவர்கள் வகுத்தார். இந்த வகையில் பார்க்கும் போது இன்று வெளிவரும் கம்பராமாயணப் பதிப்பிற்கு அவர்தாம் மூல காரணம் என்று கூறலாம். சென்ற ஆண்டுக் கம்பன் விழாவிற்கு வந்திருந்த வெளியூர்க் கம்பன் கழகங்களின் பிரதிநிதிகளோடு இத் திட்டத்தைப் பற்றி விவாதித்தார். இந்தத் திட்டம் கம்பன் கழகத்தால் முழுமையாகப் பரிசீலிக்கப்பட்ட பிறகு 1975ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 7ஆம் தேதி மயிலை இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடந்த கூட்டமொன்றில் தொடங்கி வைக்கப்பெற்றது. பதிப்பு வேலையைக் கவனிப்பதற்காகப் பல்கலைச் செல்வர், பன்மொழிப்புலவர் டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுடைய தலைமையில் ஓர் ஆசிரியக் குழுவையும் கழகம் ஏற்படுத்தியது.

அந்தக் குழுவினர் இதுவரையில் வந்திருக்கும் கம்பராமாயண அச்சுப் பிரதிகளையும் அவைகள் ஆய்ந்திருக்கும் ஏட்டுச் சுவடிகளையும் புதிய கண்ணோட்டத்தோடு ஆய்ந்து அதன் பதிப்பு வேலையை மிக விரைவாக முடித்துத் தந்தனர். நாங்கள் எடுத்துக்கொண்ட பொறுப்பு ஓர் ஆராய்ச்சிப் பதிப்பை வெளிக் கொணர்வது என்பதன்று. அத்தகைய பதிப்பை வெளிக் கொணர்வது என்றால் பல ஆண்டுகள் தேவைப்படும்; பல லட்ச ரூபாய்கள் செலவாகும். எந்தவிதமான கம்பராமாயண மூலப்பதிப்பும் கிடைக்காத குறையை நீக்கவேண்டும் என்பதுதான் கழகத்தின் நோக்கம். அதே சமயத்தில் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பதிப்பாகவும் அது அமைய வேண்டும் என்றும் விரும்பினோம். பாடபேதங்களுக்கு நிரம்ப இடமிருக்கிற கம்பராமாயணம் போன்ற காப்பியங்களைப் பதிப்பிக்கின்றபோது ஒரு குறிப்பிட்ட பதிப்பு அனைவரையும் திருப்திபடுத்துவதாக அமைந்துவிட்டது என்று யாராலும் சொல்ல முடியாது. இந்தப் பதிப்பை வெளிக் கொணர்வதற்கு என்ன முறை கையாளப்பட்டது என்பதை நூலின் பதிப்புரை தெளிவுபடுத்துகிறது.

இன்று உங்கள் கையிலே தவழும் இந்தப் பதிப்பு, சில தனிச் சிறப்புக்களைப் பெற்றிருக்கிறது என்பதைப் பணிவு கலந்த பெருமையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். ஆறு காண்டங்களையும் ஒரே தொகுதியில் கொடுக்கும் பதிப்பு இதுவரையில் வந்தது இல்லை. இந்தப் பதிப்பு இந்தத் தனிச் சிறப்பைப் பெற்றிருக்கிறது. இந்தப் பதிப்பை இப்படிக் கொணர்வதற்காக பைபிள் பேப்பர் என்ற தாளைத் தேர்ந்தெடுத்து இந்த நூலை அச்சேற்றியிருக்கிறோம். அத்தகைய தாளில் அச்சிடப் பெறும் முதல் தமிழ்க் காப்பியம் இதுவேயாகும். விவிலிய நூல் எல்லாக் கிறித்துவர்களின் கையிலும் தவழுவதுபோல, ஒரே கையடக்கமான பதிப்பாய் கம்பனும் தமிழர்கள் எல்லோருடைய கைகளிலும் தவழ்ந்து, நெஞ்சிலும் நாவிலும் இனிக்க வேண்டுமென்ற எங்கள் நோக்கத்தை இவை நிறைவேற்றுகின்றன. மூன்றாவதாக, நூலின் தொடக்கத்தில் பொருள் மாலை என்ற தலைப்பில், ஆறு காண்டங்களின் சாரத்தையும் தொடர்ச்சியாய்க் கொடுப்பதுபோல, எந்த எந்தப் பாடல் தொகுதிகள் எதெதைக் குறிக்கின்றன என்பது கொடுக்கப்பெற்றிருக்கிறது. இவையனைத்தும் இப் பதிப்பின் தனிச் சிறப்புகளாகும்.

இப் பதிப்பு வேலையின் பொறுப்பு முழுவதையும் தொடக்கத்திலிருந்து இறுதிவரையில் டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர்கள், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள்,

பேராசிரியர் தெ. ஞானசுந்தரம் அவர்கள் ஏற்று நிறைவேற்றியிருக்கிறார்கள். திரு மு. அருணசலம் அவர்களும் பாட வேறுபாடுகளை ஒப்புநோக்குவதற்கு மிகவும் உதவியாக இருந்தார்கள். அவ்வப்போது திரு கம்பன அடிப்பொடி, திரு கி. வா. ஜகந்நாதன ஆகிய அறிஞர்களின் ஆலோசனையும் கிடைத்துக் கொண்டிருந்தது. வித்துவான் மு. சண்முகம் பிள்ளையவர்கள் பதிப்பு வேலைக்குத் தன்னுடைய ஆலோசனையைத்தந்ததோடு, மூலப்படி எழுதியுதவிப் படிவங்கள் திருத்தல் (Proof reading) முழுவதையும் கவனித்ததுமன்றி, பொருள் மாலை, பாடல் முதற் குறிப்பு அகராதி தயாரிக்கும் பொறுப்பையும் முழுக்க முழுக்க ஏற்றுக்கொணடிருக்கிறார்கள். இந்த வேலையில் வித்துவான் மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்கு வித்துவான் கா. பெ. ஞானசம்பந்தம் அவர்கள் பெரிதும் உதவியிருககிறார்கள். இவர்கள் அனைவர்க்கும் சென்னைக் கமபன் கழகம் ஆழ்ந்த நனறியையும், பணிவான வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறது. அவாகளுடைய பணியினைத் தமிழர்கள் அனைவருமே நனறியோடு பாராட்டுவார்கள் என்பது எங்கள் நம்பிக்கை. திரு. மு. சண்முகம் பிள்ளையவர்கள் இக் குழுவில பணியாற்றுவதற்கு அனுமதி தந்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் எங்கள் நன்றி. இந்தப் பதிப்பை அச்சிடும் பொறுப்பை ஏற்றுக் கொணடவர்கள் செனனை ஹோா அண்டு கம்பெனியாராவார்கள். தொழில் முறை என்பதல்லாமல் உண்மையான ஈடுபாட்டுடன் இந்த அச்சு வேலையை மிக விரைவிலே சிறந்த முறையில் செய்து தந்த மேற்படி அச்சகத்தாருக்கும், குறிப்பாக அதன் உரிமையாளர்களுள் ஒருவரான திரு வி. சேதுராம் அவர்கட்கும் கழகம் தன்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறது.

இப் பதிப்பு மக்கள் கையில் தவழ ஆரம்பித்துவிட்ட பிறகு கம்பனுடைய காப்பியததை எடுத்து விளக்கும் முறையில் வகுப்புகளுக்கும், அவ்வப்போது கூட்டங்களுக்கும் ஏற்பாடு செய்யும் பணியைத் தன்னுடைய அடுத்த பணியாகக் கம்பன் கழகம் தொடங்க விரும்புகிறது. இதுவரையில் தந்ததுபோல் இந்தப் பணிக்கும் பொதுமக்கள் பேராதரவு தருவார்கள் என்று கழகம் நம்புகின்றது. ஆண்டுதோறும நடக்கும் கம்பன் விழாத் தவறாமல் நிரந்தரமாக நடந்து வருவதற்கும், இத்தகைய வகுப்புகளும் கூட்டங்களும் எத்தகைய இடர்ப்பாடும இன்றி நடந்து வருவதற்கும் ஆவன செய்வது கழகத்தின் அடுத்த முயற்சியாகும். இதற்குத் தேவையான ஏறபாடுகள் பொதுமக்களின் பேராதரவுடனும் அரசாங்கத்தின் ஒத்துழைப்புடனும்தான் செய்ய முடியும். இந்த முறையில் அறக் கட்டளை ஒன்று ஏற்படுத்தி, அதிலிருந்து வரும் வருமானத்தை ஆண்டுதோறும் கம்பன் விழாத் தடையின்றி நடத்துவதற்கு உபயோகப் படுகிறாற்போல் மூலதனம் ஏற்படுத்த விரும்புகிறது. கழகத்தின் நடவடிக்கைகளையும், வகுப்புகளையும, கூட்டங்களையும் நடத்துவதற்கு கழகத்துக்குச் சொந்தமான இடம் ஒன்று தேவை. இவ்விரு தேவைகளையும் நிறைவேற்றும் வழியில் பொது மக்களின் பேராதரவைக் கம்பன் கழகம் வேண்டிக்கொள்ளுகிறது.

இன்று உங்கள் கையில் தவழும் இம் மலர் சென்ற ஆண்டு மலரை விடச் சற்றுச் சிறிதாக இருப்பதற்குப்

பல காரணங்கள் உண்டு. என்றாலும் மலர் சற்று அளவில் சிறியதேயன்றி தரத்தில் சற்றும் குறைந்ததன்று.

கம்பனுடைய காப்பியம், ஆராய்ச்சியாளர்களும் கட்டுரையாளர்களும் தங்கள் திறமையைக் காட்டுவதற்கு என்றும் எந்த அளவுக்கும் இடம் கொடுக்கும் ஒரு வற்றாத ஊற்றாக அமைந்துவிட்டது. அந்த ஊற்றி லிருந்து சுரக்கும் நீர் இலக்கிய ரசிகர்கள் அனைவருக்கும் அமுதமே யாகும். அத்தகைய அமுதத்தை அறிஞர் பலர் இதில் இடம் பெற்றிருக்கும் கட்டுரைகள் மூலமாக வாசகர்களுக்கு வார்த்தெடுத்துக் கொடுத்திருக்கிறார்கள். அவர்களுக்கும், கழகத்தின் வேண்டுகோளுக்கிணங்கி விளம்பரங்கள் பெற உதவியவர்களுக்கும், அவ்வாறு விளம்பரங்கள் தந்து உதவியவர்கட்கும் கம்பன் கழகத்தின் ஆழ்ந்த நன்றி உரித்தாகுக. சென்ற ஆண்டைப் போல, இவ்வாண்டும் மிகக் குறுகிய காலத்தில் இம் மலரைக் கண்கவர் விருந்தாய், பன்னிறப் படைப்பாய், அழகு தவழும் பெட்டகமாய் அச்சியற்றித் தந்த ஹோ அண்டு கம்பெனியாருக்கும் இக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

மயிலை,
14—8—1976

**மு. மு. இஸ்மாயீல்,**
தலைவர், கம்பன் கழகம், சென்னை.

# உள்ளுரை




# கம்பராமாயணம் - புதிய பதிப்பு

திரு. கி. மு. அழகர்சாமி
செயலாளர், கம்பன் கழகம், சென்னை

கம்ப ராமாயணம் - புதிய பதிப்பு ஒன்றினை, இரண்டாவது கம்பன் விழாவில் சென்னைக் கம்பன் கழகம் வெளியிடுகிறது. இப் பதிப்பு எவ்வாறு உருவாக்கப்பட்டதென்பது இங்கே விவரிக்கப்படுகிறது.

கம்ப ராமாயணப் பதிப்புகள் சிலபல இருப்பினும், கையடக்கமாக, அவ்வப்போது படிப்பதற்கு ஏற்ற தாக ஒரே நூல் வடிவில் இல்லை யென்றே சொல்லலாம். திரு. எஸ். ராஜம் அவர்கள் சந்தி பிரித்து வெளியிட்ட பதிப்பும் இப்போது கிடைப்பதில்லை. கம்பனைப் பரப்பு வதற்கு மூலம் மட்டும் அடங்கிய புத்தகம் ஒன்றின் தேவையை நிறைவு செய்யவே இப் பதிப்பு அச்சிடப் பட்டுள்ளது.

கம்ப ராமாயணத்தின் ஒவ்வொரு பாட்டிலும் பாட வேறுபாடுகள் பலப்பல காணப்படுகின்றன. இப் பாட வேறுபாடுகளுக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் முக்கிய மான காரணம் கம்பன் எழுதிய ஏடு இல்லாமையும், கம்பன் காலத்துக்கு அடுத்து, அதாவது பத்தாம் நூற்றுண்டில் உருவாக்கப்பட்ட ஏடுகள் நமக்குக் கிடைக்காமையும்தான். நமக்குக் கிடைத்துள்ள ஏடுகளெல்லாம் 3 அல்லது 4 நூற்றுண்டுகள் கால அளவிலே உள்ளன. எனவே, அப்படி வழக்கில் இருக்கும் ஏடுகளைக் கொண்டே, கம்பனில் இருக்கும் வேறுபாடுகளைக் கண்டறிய வேண்டும். வெவ்வேறு காலத்திய பல மண்டலங்களைச் சேர்ந்த ஓலைச் சுவடிகளும், அச்சுப் பிரதிகளும் உள்ளன. இவற்றையெல்லாம் அண்ணுமலைப் பல்கலைக்கழகம் தொகுத்து வெளியிட்டுள்ள கம்ப ராமாயணப் பதிப்பில் பின் சேர்க்கையாகக் கொடுத்துள்ளார்கள். இப்படிப்பட்ட வேறுபாடுகளையெல்லாம் ஆய்ந்து, இப் பதிப்பு வெளி வர வேண்டியதாயிற்று. இப் பணியைப் பல்கலைச் செல்வர், டாக்டர் தெ. பொ. மீ. அவர்கள் தலைமையில் நிறுவப்பட்ட குழு 1975, நவம்பர்த் திங்களில் தொடங்கிற்று. குழுவில் உறுப்பினர் களான திருவாளர்கள் அ. ச. ஞா. அவர்களும், தெ. ஞானசுந்தரம் அவர்

களும் பாட வேறுபாடுகள் முழுவதையும் ஒப்பு நோக்கினர். திரு மு. அருணுசலம் அவர்கள் சில காண்டங்களின் பாட வேறுபாடுகளை ஆய்ந்து, பெரும்பான்மையான பாடங்களைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தார்கள். திரு கம்பனடிப்பொடி, திரு கி. வா. ஜகந்நாதன் ஆகியோர் அவ்வப்பொழுது தங்களது யோசனையைக் குழுவிற்குத் தெரிவித்தார்கள். திரு தெ. ஞானசுந்தரம் அவர்கள் குழுவில் பணியாற்றியதோடன்றி, பாடல்களுக்கு அரும்பத உரையும் எழுதிக் கொடுத்துள்ளார்கள்.

முதலில் பாட வேறுபாடுகள் எல்லாவற்றையும் ஆராய்ந்து எது உண்மையான பாடமாக இருக்கலாமென்று முடிவு செய்வதற்கு நீண்டகாலம் தேவைப்படுமென்பதை உணர்ந்து, பெரும்பான்மையான பாடங்களையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று குழு முடிவு செய்தது. அதன் பயனுக ஒவ்வொரு பாடலில் உள்ள பாட வேறுபாடுகளைக் கண்டறிந்து, மிகுதியான ஓலைச் சுவடிகளிலும், அச்சுப் பிரதிகளிலும் உள்ளனவற்றை ஏற்றுக்கொண்டது. இதில் ஒருவருடைய விருப்பு வெறுப்புக்கு இடமின்றிப் பாடம் அமையும். இது தான் சரியான பாடமென்று கூற இயலாவிட்டாலும், இதுதான் பெரும்பான்மையான பாடம் என்பதைக் கூறலாம்.

இதற்கு மேற்கொண்டு, கம்பனது உண்மையான பாடம் எது என்பதைப் பற்றி ஆராய வேண்டுமென்றுல் அதற்கு உலகத்திலுள்ள சுவடிகள், மற்ற அச்சுப் பிரதிகள் இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து ஆராய்வதற்குப் பெரும் முயற்சியும், பெரும் செலவும் தேவைப்படுகின்றன. அத்தகைய ஆராய்ச்சி எவ்வளவு சீக்கிரமாக மேற்கொள்ளப்படுகிறதோ அவ்வளவு பயன் தரத்தக்கதாக அமையும். இம் மாதிரியான முயற்சியினை அரசோ அல்லது பல்கலைக்கழகங்களோதான் எடுத்து நிறைவேற்ற முடியும்.

ஆசிரியர் குழு பரிந்துரைத்தபடி, கீழ்க்கண்ட முறைகளில் கம்ப ராமாயணம் புதிய பதிப்பு உருவாக்கப் பெற்றுள்ளது.

1. பாடல்கள் சந்தி பிரிக்கப்பட்டு, நிறுத்தக் குறிகளுடன் எல்லோரும் புரிந்துகொள்ளும் வகையில் அமைக்கப் பெற்றுள்ளன.

2. சந்தம் மாறுபடும் இடங்களில் பாடலின் முதல் எழுத்துப் பெரிய அச்சில் கொடுக்கப்பெற்றுள்ளது.

3. காவியத்தின் பொருள்-போக்கு விளங்கும் வகையில் உரிய இடங்களில் குறுந் தலைப்புகள் கொடுக்கப் பெற்றுள்ளன.

4. இடைச்செருகல் என்று கருதப்படும் பாடல்களை மிகைப் பாடல்கள் என்ற தலைப்பில், ஒவ்வொரு காண்டத்திற்கும் பின்னுல், தனியே தொகுத்துத் தரப்பட்டுள்ளது. அந்தப் பாடல்கள் எங்குச் சேர்க்கப்பட்டிருந்தது என்று மூலப்பாடல் எண்ணுடன்—1, 2 என எண் தந்து காண்பிக்கப்பட்டுள்ளது.

5. ஒரு சில பிரதிகளில் மட்டும் காணப்படாமல், பெரும்பான்மையான பிரதிகளில் காணப்படும் பாடல்கள் (*) உடுக்குறியிட்டுக் காட்டப் பெற்றுள்ளன.

6. பெரும்பான்மையான பிரதிகளில் இருந்தபோதிலும், ஒரு சிலர் ஆராய்ச்சி முறையில் ஐயப்படும் பாடல்கள் அல்லது எல்லாப் பிரதிகளில் காணப்பட்டாலும், குழுவிற்குப் பொருத்தமில்லாததுபோல் தோன்றும் பாடல்கள் (†) வாட்குறியிட்டுக் காட்டப் பெற்றுள்ளன.

7. நூல் முழுமைக்கும் பாடலின் தொடர் எண்ணிக்கை பக்கத்தின் தலைப்பில் இடப் புறமும், வலப் புறமும் கொடுக்கப்பெற்றுள்ளது.

8. படலங்களுக்குள் பாடல்தொடர் எண்ணிக்கை பாடல்களுக்கு எதிரே கொடுக்கப்பெற்றுள்ளது.

9. அருஞ்சொல் உரை, அந்தந்தப் பாடலின் எண்ணிக்கையுடன், ஒவ்வொரு பக்கத்தின் அடியில் சிறிய அச்சில் கொடுக்கப்பெற்றுள்ளது.

10. காப்பியப் போக்குத் தெரிவதற்கும், எளிதில் குறிப்பிட்ட பாடலைத் தேர்ந்தெடுப்பதற்கும் 'பொருள் மாலை' என்ற தலைப்பில் பாடல்களின் குறுந்தலைப்புக்கள் ஒருசேர அமைக்கப்பெற்று, விரிவாகக் கொடுக்கப்பெற்றுள்ளன.

11. படல அகராதி ஒன்றும் நூலின் பின் அமைக்கப்பெற்றுள்ளது.

12. பாடல் முதல் குறிப்பு அகராதி ஒன்றும் நூலின் ஈற்றில் அமைக்கப்பெற்றுள்ளது.

13. நூல் முழுமையும் ஒரே புத்தக வடிவில் வர வேண்டுமென்பதற்காக மெல்லிய தாள் (விவிலியம் நூலுக்குப் பயன்படுத்தப்படும் தாள்) தேர்ந்தெடுக்கப்பட்டு, பயன்படுத்தப் பெற்றுள்ளது.

14. இந் நூல் சென்னை, ஹோஅண்டு கம்பெனியாரால் மாேனா டைப்பில் அச்சிடப்பெற்றுள்ளது.

இந் நூல் எல்லா நூல் நிலையங்களிலும், ஒவ்வொரு தமிழரின் இல்லத்திலும் இருக்க வேண்டுமென்பதற்காக நூலின் விலை, இலாபமும் நஷ்டமும் இன்றி ரூபாய் 75 என்று நிர்ணயிக்கப்பெற்றுள்ளது.

இப் பணி செவ்வனே விரைவாக முடிவு பெற்றதற்குப் பதிப்பாசிரியர் குழுவின் அயராத உழைப்பே காரணமாகும். அவ்வாறே திரு. மு. சண்முகம் பிள்ளை அவர்களும், திரு கா. பெ. ஞானசம்பந்தம் அவர்களும் அச்சுப் பிரதிகளை அச்சுப் பிழையின்றித் திருத்தி, அச்சிடுவதற்கு அனுப்பியதும் காரணமாகும். அச்சகத்தினரும் மிகுந்த விரைவில், உடனுக்குடன் அச்சிட்டு, விரைவில் பணியை முடித்துக் கொடுத்தார்கள். அச்சகத்தின் உரிமையாளர்களுள் ஒருவரான திரு வி. சேதுராம் அவர்கள் இப் பணியில் தொழில் அக்கறையை எல்லாம் கடந்த மனப்பூர்வமான ஆர்வத்துடனும ஈடுபாட்டுடனும் உதவியதே இந் நூல் இவ்வளவு விரைவிலும் சீரிய முறையிலும் வெளிவரக் காரணமாகும்.

இக் காப்பியம் வெளி வர உதவியாக இருந்த எல்லோருக்கும், பொருள் உதவி செய்த அறநிலையங்கள், நிறுவனங்கள், பதிப்புக்கு முன் பணமாகக் கொடுத்த வாசகர்கள் எல்லோருக்கும் கம்பன் கழகத்தின் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

# கட்டுரையாளர்பற்றி....

## நீதிபதி திரு. மு. மு. இஸ்மாயீல்

நீதிக்கு மட்டுமா பதி, இவர்தான் பட்டிமண்டபங்கட்கும் பதி - பட்டிமண்டபத் தலைவர் என்றால் இவர்தான் என்று சுட்டிக் காட்டும் அளவிற்குத் தமிழகமெங்கணும் பேரும் புகழும பெற்றவர் - உயர்நீதி மன்ற நீதிபதியான இவர் பட்டிமண்டபங்களுக்கே ஒரு தனிப் பொலிவையும் சோபையையும் ஊட்டிய பீடுடையவர் - தாய்நாடும் தமிழ் மொழியும் இவரின் இரு கண்கள் - ஆம். தேசத் தொண்டிலும் தெள்ளுத் தமிழிலும் இளமையிலிருந்தே ஈடுபாடு கொண்டவர் - தேமதுரத் தமிழோசை மட்டுமன்றி, தேசங்களெல்லாம் ஒலிக்கும் ஆங்கிலததிலும் ஆராக் காதல் கொண்டு இனிய நடையில் பேசக் கூடியவர் - இவர்தம் 'செவிநுகர் கனிகளு'ம், 'கம்பன கண்ட இராமனு'ம் வளரும் தலைமுறையினருக்குக் கருததுக் கருவூலம் - 'கம்பன் என்றால் வேறெந்த வேலையும் பிறகுதான், எனனுமளவுக்குக் கம்பனபால் தனி நாட்டமும் ஈடுபாடுங் கொண்ட இவர், செனனைக் கம்பன் கழகத்தின் தலைவரும் ஆவார் - பத்துத் திங்களில் பதினாயிரம் பாடல் கொண்ட கம்பராமாயணம் முழுமையும் ஒரே கையடக்கப் பதிப்பாய், கிறித்துவருக்கு விவிலியம் போல், தமிழருக்குக் கம்பன் என்னுமாப்போல் சீரும் சிறப்புமாய்ப் புதிய பதிப்பொன்றினை இக் கழகம் வெளியிடச் செய்ததே இவரின் ஈடுபாட்டுக்கு ஓர் அளவுகோல் - அவருக்குக் கம்பனிடத்துள்ள ஈடுபாட்டுக்கு இணையானது இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் உள்ள ஈடுபாடாகும் - சீறாப்புராணம் போன்ற தமிழ்ப் பெருங் காப்பியங்களில் தாம் பெரிதும் புலமை பெற்றிருந்தபோதிலும், அந் நூல்கள் முஸ்லீம்களிடையேகூடப் பரவவில்லையே என்ற கவலை கொண்டவர் - தமிழ் அறிஞர்கள் எல்லோராலும் பாராட்டுதற்குரித்தான இத்தகைய நூல்களை நன்றாகப் பதிப்பித்து முஸ்லீம்களும், முஸ்லீம் அல்லாதாரும ஒருங்கே படித்துப் பேரின்பம் பெறவேண்டும் என்று விருமபுபவர் - அம் முயற்சியில் தம் முஸ்லீம் சகோதரர்களைத் தூண்டிக்கொண்டிருப்பவர்.

## திரு. உ. வே. கி. வரதாச்சார்ய ஸ்வாமிகள்

ஸ்வாமிகள் வைணவ உலகம அறிந்த பெருஞ் சான்றோர் - இவர் ஒரு வடமொழிக் கடல் - தமிழ் நெஞ்சினர் - வைணவ நூல்களைப் பற்றி ஆராய்வதும், திருமாலின் பெருமையினை வாய் மணக்க விரித் துரைப்பதும் இவர்தம் பொழுது போக்குகள் - வான்மீகி ராமாயணம், பாரதம் போன்ற நூல்களின் நுண் பொருள்களை ஆழ்ந்து கண்டறியும் இவர்கள், கம்ப நாடர் பாக்களிலும் நெஞ்சைத் திறை கொடுத்தவர் - உயர்திரு காரப்பங்காடு ஸ்வாமிகளின் தலைமாணக்கருள் ஒருவர் - இவர்தம் உபந்யாஸங்களைக் கேட்டு மகிழா வைணவர்களே இல்லை எனலாம்.

✱ ✱ ✱

## திரு. என். வி. நாயுடு

சட்டக் கல்வி பயின்ற இவர் சங்கீதத்திலும் வல்லுநர் - ஆயுள் காப்புறுதிக் கழகத்தில் மேலாண்மை இயக்குநராக இருந்து ஓய்வு பெற்றவர் - ஆயுள் பூராவும் கற்றலும் முடியாத அளவுக்கு ஆராய்ச்சிக் கண்கொண்டு இலக்கியங்களை நுணுக்கமாகப் பயின்றவர் - தமிழ், வட மொழி, ஆங்கிலம் என்பவற்றுடன் இன்னும் சில மேனாட்டு மொழிகளும் கற்ற பன்மொழிப் புலமை கொண்ட அறிஞர் - புள்ளிக் கணக்கு ஆய்வுத் துறையில் ஆக்ச்சுவரி (Actuary) ஆக இருந்த இவர் அதில் தாம் பெற்ற அநுபவத்தை இலக்கியங்களையும் கூர்ந்து நோக்குவதில் இப்போது பயன் படுத்துகிறார் - அப்படி ஆய்ந்து வளம்பெருக்கித் தாம் பெற்ற இன்பத்தை நாமும் பெற ஓர் அறக்கட்டளையை நிறுவி அதன் வாயிலாகச் சில நூல்களைப் பதிப்பித்திருக்கிறார் - இன்னும் பல அரிய நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் தமிழ்ப் பணியில் ஈடுபட்டிருப்பவர் - குடத்தி லிட்ட விளக்காய் இருக்கும் இவர் குணக் குன்று.

## திரு. மு. அருணாசலம்

இவருடைய பெருமைகளை எடுத்துரைத்ததும் இவரைப் பார்த்தால் 'அவர்தான் இவரா?' என்னுமளவுக்குத் தன்னை வெளிக் காட்டிக் கொள்ளாத அறிஞர் - அந்த அளவுக்குப் பழந்தமிழ்ப் புலமை, வடமொழிப் பாண்டித்யம, சைவ சித்தாந்தச் செல்வம், 'தமிழ் இலக்கிய வரலாறு' கணித்த கரை காணாத இலக்கிய நலம், காந்தி ஆஸ்ரமத் தொண்டு, தமிழ்—சம்ஸ்கிருதக் கழகத்தின இயக்குநர்ப் பணி—இததனையிலும் நிறைந்து விளங்குபவர் - தனி மனிதர் யாரும் செய்யாத, செய்ய முடியாத பெரும் பணியாகிய "தமிழ் இலக்கிய வரலாறு" நூல்களைத் தாம் ஒருவரே செய்த பெருமையுடையவர் - பல பழம்பெரும் நூல்களை ஏட்டுப் பிரதிகளிலிருந்து ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் வெளியிட்டவர் - சென்னைக் கம்பன் கழகத்தின் கம்பராமாயணப் பதிப்புப் பணியிலும் பங்கேற்றவர்.

  

## டாக்டர் தமிழண்ணல்

தாமே பயின்ற தமிழ்ப் பேராசிரியராகிய இவர் எம்.ஏ. வரையும் கல்லூரியில் பயிலாமல், தாமே பயின்று சிறப்புடன் விளங்குகிறவர். சங்க நூல்கள்பற்றிய ஆராய்ச்சி மேற்கொண்டு பிஎச்.டி. பட்டம் பெற்றவர். பழைய முறையில் தமிழ் பயின்றவராகலின் ஆழமான புலமை உடையவர். தற்போது இலக்கிய ஒப்பியல் ஆய்வுத் (Comparative Literature) துறையில் கவனஞ் செலுத்தி, ஒரு நூலும் எழுதியுள்ளார். இயல்பாகவே கவிதை இயற்றுந் திறனுடையவராகலின் சிறந்த கவிதைகள் பல புனைந்துள்ளார். மதுரைபற்றிய இவரது கவிதைக்கு அரசினர் பரிசும் கிடைத்துள்ளது. மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராக உள்ளார்.

## பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன்

பட்டிமண்டப வித்தகரான பேராசிரியர் இராதாகிருஷ்ணன் திருச்சி தேசீயக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிகின்ருர். கம்ப நாடன் கவிதையில் தனி ஈடுபாடு கொண்ட இவர், அவன் கவிதைகளில் நுணபொருள் காணும் ஆற்றல் பெற்றவர். சிறந்த சொல்லாற்றல் பெற்றுள்ள இவர் ஏருத இலக்கிய மேடைகள் தமிழ் நாட்டில் இல்லை என்றே கூறிவிடலாம் - மேடைப் பேசசிலே தனக்கென ஒரு பாணியை வகுத்துக்கொண்டு கேட்பவரைப் பிணிக்கும் திறன பெற்றவர்.



## டாக்டர் சுப. அண்ணுமலை

பச்சையப்பன் கல்லூரியில் பயின்று தமிழில எம.ஏ. பட்டம் பெற்ற இவர், மதுரைத் தியாகராசர் கல்லூரியில் முதுகலைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிருர். வள்ளலார்பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்டு பிஎச்.டி. பட்டம் பெற்றுள்ள இவர் ஆழமான கல்வியும், சிறந்த ஆராய்ச்சித் திறனும், நல்ல சொல்லாற்றலும் உடையவர்.



## பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு

பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் எம்.ஏ. பயினறவர் - சில காலம் அரசினர்க் கல்லூரிகளில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிப் பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத்துத் திருக்குறள் ஆராய்ச்சிப் பிரிவில் சில ஆண்டுகள் பணி புரிந்தவர் - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தற்பொழுது பணியாற்றி வருகின்ருர்-'திருக்குறள் மணி' எனப் போற்றப் பெற்றவர் - 'நீதி இலக்கியம்' என்ற தம் நூலுக்காக சாகித்ய அகாதெமிப் பரிசு பெற்றவர்.

## டாக்டர் இரா. சீனிவாசன்

பச்சையப்பன கல்லூரியில் தமிழ எம்.ஏ. பயினறு, இப்போது அக் கல்லூரியிலேயே முதுகலைப் பேராசிரியராகவும தமிழ்த் துறைத் தலைவராகவும பணி புரிகினறுர் - சென்னைப் பல்கலைக்கழகததில 'சங்க இலக்கியத்தில் உவமைகள்' என்னும் தலைப்பில் எழுதிய ஆராய்சசிக்காக 'பிஎச்.டி.' பட்டம் பெற்றுள்ளார் - தமிழ் மொழியின் பல்வேறு துறையில் பல நூல்களும், சிறப்பாக 'மொழியியல்' துறையில் சில நூல்களும் இயற்றியுள்ளாா - சுந்தர காண்டத்தை உரை நடையில ஆக்கித் தந்துள்ளார் - அனுமனைப்பற்றி 'சொலலின் செல்வன்' என்று ஓர் நாடகமும் ஆக்கியுள்ளார்.

* * *

## திரு. தெ. ஞானசுந்தரம்

சென்னைக கந்தசாமி நாயுடு கல்லூரியில தமிழப் பேராசிரியரான இவர், இளந்தலைமுறையின் வளரும் வாரிசு - குறைந்த வயதிலேயே நிறைந்த புலமையுடையவா - தமிழ், ஆங்கிலம, வடமொழி ஆகிய மூன்றிலும கற்றறிவுடையவர் - இலககிய மேடைகளில இவரின் குரல் ஒலிக்காத நாளே இல்லை எனலாம - வைணவக கொளகைகளை முறை யாகப் பயினறவர் - சென்னைக் கமபன கழகம் இன்று வெளியிடும் கமபராமாயணம் பதிப்புப் பணியில பெருமபங்கு எடுததுக்கொண்டவர்.

* * *

## திரு. பழ. பழனியப்பன்

கல்லூரிப் படிப்பு முடிந்தவுடன் ஏ.எம்.எம். நிறுவனத்தாரின் அறக் கட்டளைகளினுல் நடைபெறும் இரண்டு உயர்நிலைப் பள்ளிகள், மருத்துவ மனை ஆகியவற்றின் செயலாளராகப் பணியாறறி வருகிறுர் - பிற துறையில் பணி புரியினும் சிறந்த தமிழ்ப் புலமையும் கம்பன்பால் தனி ஈடுபாடுங கொண்டுள்ள இவர், சென்னைக் கம்பன் கழகத்தின் பொருளாளரும ஆவார் - எடுத்துக்கொள்ளும் எநதப் பணியையும் தம் திறமை முழுவதையும் காட்டிச் செவ்வனே சிறப்பிககும் தூய மனம் பெற்றவர் - காரைக்குடி கமபன விழாக்களைச் சிறப்புடன் நடத்துவதில் தொண்டாற்றிய தம் அனுபவத்தை இப்போது சென்னையில் கம்பன் விழா நடததுவதில காட்டிக்கொண்டு வருகிறுர் - இளைஞர் - எந்த நல்ல பணியிலும் முன் நிற்கும பண்பாளர்.

# இரு பேச்சுடையான்

நீதிபதி மு. மு. இஸ்மாயீல்

ஒரு கதையின பாத்திரங்கள் அனைத்தும் அக் கதையாசிரியரின் படைப்புக்களே. எனவே, தான் படைககும் ஒவ்வொரு பாததிரத்தினிடமும் முழு அக்கறை கொண்டவனுக அப் பாத்திரத்தைப் படைப்பதில் தன் திறமை முழுவதையும் ஆசிரியன காட்டிவிடுகின்ருன். ஒரு பாத்திரம் நற்குணங்களின் இருப்பிடமாகவும நல்லொழுக்கத்தின் உறைவிடமாகவும் இருக்கக்கூடும. மற்ருெரு பாத்திரம தீமையே உருவாகவும் கொடுமையே கோலமாகவும் இருக்கக்கூடும. இதன் காரணமாக முதற் பாததிரததைப் படைப்பதில் ஆசிரியன் தன் திறமை முழுவதையும் காட்டிவிட்டு இரண்டாவது பாத்திரத்தைப் படைப்பதில் தன் திறமையைக் காட்டாமலே இருந்துவிடுகிருன் என்று சொல்வதற்கில்லை. இரண்டு பாத்திரங்களையும் படைப்பதில் ஆசிரியன தன் முழுத் திறமையையும் காட்டத்தான் செய்கிருன். இதன் காரணமாகவே முதற் பாத்திரம் குணக்குன்ருகவும் சீலத்தின் பெட்டகமாகவும் பொலிவு பெறுகிறது; இரண்டாவது பாத்திரம தீமையின் உருவமாகவும் நஞ்சின் வடிவமாகவும அமைவுறுகிறது. கதையின் தலைவனை எந்த அளவுககுக் கவனத்துடனும் ஈடுபாட்டுடனும ஆசிரியன் படைக்கிருனே அதே அளவுக்குக் கவனத்துடனும ஈடுபாட்டுடனும எதிர் தலைவனையும் படைககிருன். அது போலவே, ஒரு பெரும் பாத்திரத்தைப் படைப்பதில தான் காட்டும் அககறையையும் திறமையையும ஒரு சிறு பாத்திரத்தைப படைப்பதிலும காட்டுகிருன். கதையில் பெரும பங்கு பெறும் பாத்திரம பெரும பாத்திரமாகவும் சிறு பங்கு பெறும் பாத்திரம் சிறு பாததிரமாகவும் அமைந்துவிடுவதன் காரணமாகக் கதாசிரியன பாரபட்சம் காட்டுவதில்லை. சிற்சில கதைகளில் இரு பாததிரங்களும் ஒரே அந்தஸ்துள்ளவையாகவும் ஒரே தரத்தனவாகவும் ஒரே குணம் படைத்தவையாகவும் இருக்ககூடும். இருந்தபோதிலும, ஒரு பாத்திரம் கதாநாயகனுக இருப்பதன காரணமாக அதைப்பற்றி மிகுதியாகப் பேசவும் புகழவும வேண்டியவனுகக் கதாசிரியன ஆகிவிடுகிருன். மற்ருெரு பாத்திரம கதையில் சிறிய பங்கே பெறுவதால் அதைப்பற்றி

மிகுதியாகப் பேசுவதற்கு அவசியமோ வாய்ப்போ ஏற்படுவதில்லை. வேறு சில கதைகளில் இரண்டு பாத்திரங்கள் ஒருங்கே செயல்படக்கூடும். ஆனால், கதையின் மையக் கருத்துக்கேற்ப ஒரு பாத்திரத்தைப்பற்றியும் இதன் செயல்களைப்பற்றியுமே பேசுவது அவசியமாகிவிடும். அந்த நிலையில் மற்றப் பாத்திரம் கதையின் எல்லாக் கட்டங்களிலும் இருந்த போதிலும் கதையினுடைய போக்கிலே அந்தப் பாத்திரத்தைப்பற்றி எதுவுமே இராது. இராமாயணத்தில் அத்தகைய பாத்திரங்களில் ஒன்று சத்துருக்கன்.

சத்துருக்கன் தசரத புத்திரரில் ஒருவன். இராமன், பரதன், இலக்குவன் ஆகிய மூவருக்கும் என்ன அந்தஸ்து உண்டோ அதே அந்தஸ்து சத்துருக்கனுக்கும் உண்டு. என்ற போதிலும் இராம காதையில் சத்துருக்கன் பேசப்படுவது மிக மிகச் சிறிய அளவிலேதான். அதற்கு என்ன காரணம். குணத்திலேயோ வீரத்திலேயோ அவன் மற்ற மூவருக்கும் சளைத்தவன் அல்லனே! இதற்குரிய ஒரே காரணம் கதையின் மையக் கருத்தும் அதன் அமைப்பும்தாம்.

இராமன் காப்பியத் தலைவன். ஆகவே, அவனைப்பற்றி மிகுதியாகப் பேசப்படுவது இயற்கையே. இராமனைப் பிரியாமல் என்றும் உடனிருப்பவன் இலக்குவன். அவனுக்குத் தம்பி மாத்திரமல்லன்; துணைவன், நண்பன், ஆலோசகன் அனைத்துமே அவன். அது மாத்திரமல்லாமல் அரக்கரோடு நிகழ்ந்த போரில் பெரும் பங்கு ஏற்றவனும்கூட. எனவே, அவனைப்பற்றியும் மிகுதியாகப் பேசப்படுவது இயற்கையே. பரதனுக்கு ஆட்சியை வாங்கித் தர வேண்டும் என்ற கைகேயியின் ஆசையே இராமன் கான் செல்வதற்கும் தசரதன் வான் செல்வதற்கும் காரணமாக இருந்தது.

அந்தச் சூழ்நிலையில் பரதன் என்ன எண்ணினான், செய்தான் என்பது பற்றிக் கதையிலே பேச வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடுகிறது. ஆகையால், தசரத புத்திரர் நால்வரில் இராமனுக்கு அடுத்தபடி இலக்குவனும், இலக்குவனுக்கு அடுத்தபடி பரதனும் கதையிலே பேசப்படுகின்றனர். பரதனுடைய நிழல்போல இருக்கும் சத்துருக்கன், பரதன் இருக்குமிடத்திலெல்லாம் உடனிருக்கிறான். என்றாலும், பரதன் பேசப்படும் போதெல்லாம் சத்துருக்கன் பேசப்படுவதில்லை. இதற்குக் காரணம் கதையின் அமைப்பே.

கதையிலே சத்துருக்கனை மிகச் சிறிய அளவிலேதான் நாம் பார்க்கிறோம். இலக்குவனை ஈன்ற சுமித்திரை இரண்டாம் முறையாகச் சத்துருக்கனை ஈன்றெடுக்கிறாள். தசரதனுடைய மற்றப் புதல்வர்களுக்குப் பெயர் வைக்கப்படும்பொழுது இவனுக்கும் பெயர் வைக்கப்படுகிறது. தசரத புத்திரர் நால்வரும் வில் வித்தையும் நன்னூற்களும் கற்றுக் கொள்கிறார்கள். இராமனைப் பிரியாமல் இலக்குவன் இருக்கிறான். பரதனைப் பிரியாமல் சத்துருக்கன் இருக்கிறான். நான்கு புதல்வர்களும் நான்கு மறைகளைப் போல் வளர்கிறார்கள். மிதிலையில் சிவதனுசை இராமன் வளைத்துச் சீதையைத் திருமணம் செய்து கொள்ளப்போகும் செய்தி வந்த பிறகு, தசரதன் மிதிலைக்குப் புறப்பட்டுச் செல்லும்பொழுது பரதனோடு சத்துருக்கனும் சேர்ந்து மிதிலைக்குப் புறப்பட்டுச் செல்கிறான். அங்கே இராமனைச் சந்தித்தபோது சத்துருக்கன் அவனை வணங்குகிறான். மிதிலையில் இராமன் சீதையை மணந்துகொண்ட வேளையில், இலக்குவன், பரதன், சத்துருக்கன் ஆகிய மூவரும் ஜனகனுடைய தம்பியான குசத்துவசனுடைய மகளிர் மூவரையும் மணந்து கொள்கிறார்கள். திருமணத்

திற்குப் பிறகு எல்லோரும் அயோத்திக்குத் திரும்புகிறார்கள். பரதன் கேகைய நாட்டுக்குச் செல்லும்பொழுது சத்துருக்கன் உடன் செல்கிறான். தசரதனுடைய மரணத்திற்குப் பின், அயோத்திக்குத் திருமபுமாறு பரதனுக்கு வசிட்டன் செய்தியனுப்ப, அவ்வாறே பரதன அயோத்திக்குத திரும்பும்போது சத்துருக்கனும் உடன் வருகிறான். வரும் வழியில், கோசல நாட்டின் அவல நிலையை இருவரும காண்கிறார்கள். அந்த நிலையைச் சத்துருக்கனுக்குக் காட்டி, 'துயர நிகழ்ச்சி ஏதோ நடந்திருக்க வேணடும்' என்று பரதன் சொன்னபோது, 'பல சம்பவங்கள் நடந்திருகக வேண்டும்' என்ற ஊகத்தைச சததுருக்கன் தெரிவிக்கிறான். பினனா, தசரதனுக்குரிய ாமக்கடனகளைச சததுருக கனே செயகிறான். காடடுக்குச் சென்று மீண்டும இராமனை அயோத்திக்கு அழைத்து வருவதற்காகப் படைகள் எழ வேண்டும என்று அறிவிக்குமாறு பரதன் சொல்ல, சத்துருக்கன் அப்படியே அறிவிக்கிறான். பரதனோடு சத்துருக்கன இராமனைத திரும்பி அழைததுவரச் சித்திரகூடத்திற்குச் செல்கிறான. அப்படிப் புறப்படும்போது உடனவருகிற கூட்டத்தில் மந்தரையைக் கண்ட சததுருக்கன் அவளைப் பற்றுகிறான. அதனைக் கண்ணுறும பரதன், அவளுக்கு எத்தகைய தீங்கும செய்ய வேண்டா எனச் சத்துருக்கனைச் சமாதானப் படுத்துகிறான். கதையின் இறுதியில், இராமன கொடுத்த வாக்குப்படி குறித்த காலத்தில் திரும்பி வரவிலலை என்பதால் தன் உயிரை மாய்ததுக் கொள்ள எண்ணி, பரதன் சததுருக்கனை வரவழைத்து, ஆட்சியை ஏற்றுக்கொள்ளுமாறு சொல்கிறான சத்துருக்கன அப்படிச் செய்ய மறுக்கிறான். இறுதியில் இராமன் அயோத்தி திரும்பினபோது சத்துருககன், இராமன், இலக்குவன், சீதை ஆகியோரை வணங்குகிறான். பரதனுக்கும் சத்துருக்கனுக்கும் இராமன் தன்னுடன் வந்தவர்கள் அனைவரையும் அறிமுகப்படுத்தி வைக்கிறான். இராமனுடைய முடிசூட்டு விழாவின் போது இலக்குவனுடன் சேர்ந்து கவரி வீசுகிறான். இந்த அளவுக்குத் தான் கம்பனுடைய இராம காதையில நாம் சத்துருக்கனைப் பார்க்கிறோம்.

கேகைய நாட்டிலிருந்து அயோத்திக்குத் திரும்பிய பிறகு, தசரதன் இறந்து கிடப்பது கண்டும, இராமன காட்டுககுச் சென்று விட்டான் என்பதைக் கேட்டும், பரதன பட்ட பெருந்துயரைப் பல பாடல்களில் கவிச சக்கரவர்த்தி வருணிக்கிறான். ஆனால, சத்துருக்கனைப்பற்றி இங்கு ஒரு வாாததைகூட இலலை. தன் காரணமாகவல்லவா இராமன் காட்டுக்குப் போகவும் தசரதன் இறக்கவும் நேர்ந்தது என்ற கழிவிரக்கம் பரதனுக்கு இருந்தது என்பது உண்மையே. அததகைய எண்ணம் அத்துணையளவுக்குச் சத்துருக்கனுக்கு இருந்திருக்க இடமில்லைதான் என்ற போதிலும் தமையன் கானகம் சென்று விட்டான் என்பதுபறறியும் தந்தை விண்ணுலகு எயதிவிடடான் என்பது பற்றியும பரதனுக்கு இருந்ததைப் போல, சத்துருக்கனுக்கும் துக்கம் இலலாமலா இருந்திருககும்? இராமனைத் திரும்பி அழைத்து வருவதற்காகப் பரதன கானகம் சென்ற பொழுது அவன் தரையில் படுத்து உறங்கினான் எனபதைக் குகனிடமிருந்து கேடடுத் தெரிந்துகொணட போதும இராமனைத் தவக் கோலத்தில் கணடபோதும் பரதன் நொந்து நைந்து உருகுகிறான் உடனிருக்கும சததுருக்கனிடத்தும அத்தகைய உணர்ச்சிகள் தோன்றாமலா இருந்திருக்கும்? அப்படி இராமனைத் திரும்பி அழைத்துக்கொண்டு வரச் சென்ற விடத்து பரத்துவாச முனிவன் ஓமம் செய்து சேனைக்கு விருந்தமைக்கிறான்,

சேனையோர் அனைவரும் பெரு மகிழ்ச்சியில் மூழ்கி இன்பம் நுகர்கின்றனர். அப்பொழுது பரதன் வெறும் காய்களையும் கிழங்குகளையும் புசித்துத் தரையில் படுத்து நாளைக் கழித்தான். இதனைக் கம்பன்,

'இன்னர் இன்னணம்
யாவரும், இந்திரன்
துன்னு போகங்கள்
துய்த்தனர்; தோன்றல்தான்,
அன்ன காயும், கிழங்கும்
உண்டு, அப் பகல்
பொன்னின் மேனி
பொடி உறப் போக்கினன்.'

(அயோத்தியா காண்டம்—
திருவடி சூட்டு படலம், 17)

என்று பாடுகிறான். பரதன் மாத்திரம்தானா இப்படிச் செய்தான்? உடனிருந்த சத்துருக்கன் அப்படிச் செய்யவில்லையா? பரதன் இப்படி இருக்க, சத்துருக்கன் மாத்திரம் இந்திரன் துன்னு போகங்கள் துய்த்தானா? நிச்சயமாக இல்லை. பரதன் செய்ததையே சத்துருக்கனும் செய்திருப்பான் என்பது திண்ணம். கதையின் போக்குக்குப் பரதன் செய்ததைச் சொல்ல வேண்டியது அவசியமாகிறது. சத்துருக்கன் செய்ததைச் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. ஆகையால்தான் அது சொல்லப்படவில்லை. ஒருவேளை அதுபற்றிக் கவிஞன் கூறினால், அது 'மற்றொன்று விரித்தல்' என்ற குற்றமாகிவிடும்.

இப்படியாக மிகச் சிறிய அளவிலேயே சத்துருக்கனை நாம் காதையில் கண்ட போதிலும் அவனைக் காட்டும்பொழுது தான் ஆளும் சொற்செறிவினால் சத்துருக்கனுடைய பெருமையைக் கம்பன் நிலைநிறுத்திவிடுகிறான். அவன், இராமன், பரதன், இலக்குவன் ஆகியோருடைய தம்பி என்பதையும் நினைவுபடுத்திவிடுகிறான்.

சுமித்திரை, சத்துருக்கனை ஈன்றெடுத்ததை,

'படம் கிளர் பல்தலைப்
பாந்தலர் ஏந்துபார்
நடம் கிளர் தர,
மறை நனி மகிழ்ந்திட,
மடங்கலும் மகமுமே
வாழ்வின் ஓங்கிட,
விடம் கிளர் விழியினாள்
மீட்டும் ஈன்றனள்.'

(பால காண்டம்—
திரு அவதாரப் படலம், 105)

என்று கவிச் சக்கரவர்த்தி கூறுகிறான். இதிலே சத்துருக்கனைப் பற்றிக் கவிஞன், விசேஷமாக எதுவும் சொல்லிவிடவில்லை. அநேகம் தலைகளை உடைய ஆதிசேஷன் தாங்கிக்கொண்டிருக்கின்ற பூமியானது இன்பக் கூத்தாடவும் வேதங்கள் மிகுந்த மகிழ்ச்சியடையவும் சத்துருக்கனைச் சுமித்திரை ஈன்றாள் என்று மாத்திரம் கூறுகிறான். அப்படிக் கூறும்போதுகூட, சத்துருக்கனுடைய பிறப்பினால் பூமி ஏன் கூத்தாட வேண்டும்? வேதங்கள் ஏன் மகிழ்ச்சியடைய வேண்டும்? என்று வெளிப்படையாகவோ குறிப்பாகவோ கவிஞன் கூறவில்லை. கவிஞன் பின்னர்க் கதையினைச் சொல்லிக் கொண்டு போகிற போக்கிலுங்கூட, பூமியினுடையவும் மறைகளுடையவும் இந்த ஆனந்தத்துக்கும் மகிழ்ச்சிக்குமான காரணத்தை வெளிப்படையாகக் காண்பதற்கில்லை. சத்துருக்கனுக்கு வசிட்டன் நாமம் சூட்டியதை,

"'முத்து உருக்கொண்டு
செம்முளரி அலர்ந்தால்
ஒத்திருக்கும் எழிலுடைய
இவ் ஒளியால்
எத் திருக்கும் கெடும்'
என்பதை எண்ண
'சத்துருக்கன்' எனச்
சாற்றினன் நாமம்."

(பால காண்டம்—
திரு அவதாரப் படலம், 118)

என்று கவிச் சக்கரவர்த்தி பாடு வான். அதாவது, முத்துக்கள் ஒரு குழந்தை வடிவம் பெற்றுச செந்தா மரை மலர்கள் தன்னிடம் மலரப் பெற்றதை ஒத்திருக்கும் அழகை யுடைய ஒளிமயமான இக் குழந்தை யால் எல்லாப் பகைகளும் அழியும் என மனத்தில் நினைத்து, 'சத்துருக் கன்' என்ற பெயரை வசிட்டன சூட்டி ஞன் என்பது பாட்டின் கருத்து. குழந்தையினுடைய நிறமும் எழிலும் ஒளியும் முதலில் கூறப்படுகின்றன. பின்னர், அவனுல் பகைகள் அனைத் தும் அழியும் என்று வசிட்டன நினைத்தது எடுத்துக் காட்டப்படு கிறது. 'சத்துருக்கன்' என்ற வட மொழிப் பெயருக்கு, சத்துருக்களை அழிப்பவன் என்று பொருள். எனவே, தான் மனத்தில் எண்ணியதற்கு ஏற்ப வசிட்டன் பெயரிட்டான என்பது தெளிவாக்கப்படுகிறது. ஆனுல், இராம காதையில் சத்துருக்கன் எந்தப் பகையை அழித்தான்?

பின்னுல் வரப் போவதை முன்னுலே கோடிட்டுக் காட்டுவது ஒரு கவிஞனின சிறப்பியல்புகளில் ஒன்று. இராமன் பிறந்ததைக் குறிப்பிடும் கவிஞன்,

'சித்தரும், இயக்கரும்,
தெரிவைமார்களும்,
வித்தக முனிவரும்,
விண்ணுளோாகளும்,
நித்தரும், முறைமுறை
நெருங்கி ஆர்ப்புற
தத்துறல ஒழிந்து நீள்
தருமம் ஓங்கவே.'

(பால காணடம—
திரு அவதாரப் படலம், 100)

'. . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . .
அருமறைக்கு உணா் அரும்
அவனை, அஞ்சனக
கருமுகிற் கொழுந்து எழில்
காட்டும் சோதியைத்
திரு உறப் பயந்தனள்—
திறம் கொள் கோசலை.'

(பால காண்டம்—
திரு அவதாரப் படலம், 100)

என்று பாடுவான். இராமனுக்கு வசிட்டன் பெயர் வைத்ததையும்,

"கரா மலைய, தளர்
கைக் கரி எய்த்தே,
'அரா அணையில் துயில்வோய்!'
என, அந் நாள்,
விராவி, அளித்தருள்
மெய்ப பொருள்கே'
'இராமன்' எனப பெயர்
ஈந்தனன் அன்றே."

(பால காணடம—
திரு அவதாரப படலம், 115)

என்றே பாடுவான். இப்படிப் பாடு வதன்மூலம் கவிஞன் இராமனுடைய அவதார இரகசியத்தையும் நோக்கத் தையும, பின்னர், முனிவருக்கும் வீடணனுக்கும் அபயமளித்ததையும், அரக்கரை அழித்து, அல்லாதார் துன் பத்தை ஒழித்து அவர்களை மகிழ்வுறச் செய்ததையும் குறிப்பாக முன்கூட் டியே எடுத்துக் கூறிவிடுகிறுன்.

பரதனின் பிறப்பைப் பாடப்போந்த கவிஞன்.

'ஆசையும், விசும்பும், நின்று
அமரர் ஆர்த்து எழ,
வாசவன் முதலினேர்
வணங்கி வாழ்த்துற,
பூசமும் மீனமும்
பொலிய, நல்கினள்
மாசு அறு கேகயன்
மாது மைந்தனை.'

(பால காணடம—
திரு அவதாரப படலம், 102)

என்றும், அவனுக்கு வசிட்டன் பெய ரிட்டதை,

"கரதலம் உற்று ஒளிர்
நெல்லி கடுபப
விரத மறைப் பொருள்
மெய்ந்நெறி கண்ட
வரதன் உதித்திடு
மற்றைய ஒளியை
'பரதன்' எனப் பெயர்
பன்னினன் அன்றே."

(பால காணடம—
திரு அவதாரப் படலம, 116)

என்றும் பாடுவான. இவ்விரு பாட்டுக்களிலும் மிகுந்து நிற்பவை பரதனுடைய மறைப் பொருள் மெய்ந்நெறி கண்ட தன்மையும அதன் காரணமாக எல்லோராலும் வணங்குதற்குரிய சிறப்பைப் பெற்றமையுமே ஆம். இவையும், பரதன, பின்னல் செய்யப் போவதை முன்கூட்டி உணர்தது வதாகவே அமைந்திருக்கின்றன.

இலக்குவனின் பிறப்பை,

'தளை அவிழ் தருவுடைச்
சயில கோபனும்,
கிளையும், அந்தரமிசைக்
கெழுமி ஆர்ப்புற,
அளைபுகும் அரவினேடு
அலேவன வாழ்வுற,
இளையவற் பயந்தனள்,
இளைய மென் கொடி.'

(பால காணடம—
திரு அவதாரப் படலம, 103)

என்றும், அவனுக்கு வசிட்டன் நாம கரணம செய்ததை,

"உலக்குநர் வஞ்சகர்;
உம்பரும் உய்ந்தார்;
நிலக் கொடியும் துயர்
நீத்தனள்; இந்த,
விலக்க அரு மொய்ம்பின்
விளங்கு ஒளி நாமன்,
'இலககுவன்' எனச்
சாற்றினன் நாமம்."

(பால காண்டம்—
திரு அவதாரப் படலம், 117)

என்றும் கம்பன் பாடுகிறன். இங்குங் கூடக் கவிஞன், இலக்குவன, பின்னர்க் கோடிக்கணக்கான அரக்கரைக் கொன்று குவித்துப் பூமியின் பாரத்தைக் குறைக்கப் போவதையும், இந்திரஜித்தைக் கொன்று தேவேந்திரனையும் தேவரையும் வாழவிக்கப் போவதையும, அவற்றையெல்லாம் சாதிப்பதற்குக் காரணமாகவிருந்த இலக்குவனுடைய மொய்ம்பினையும முனகூட்டியே எடுத்துக் காட்டி விடுகிறன். சத்துருக்கன விஷயத்திலும கவிஞன் இப்படிச் செய்திருககிறன் என்று சொல்ல முடியுமா? அரக்கரோடு இராமன் செயத போரிலே சத்துருக்கனுக்குப் பங்கே இல்லே. சததுருக்கன் வேறு எந்தப் போரிலும் பங்கெடுத்துக் கொண்டதாகவும் கமபன் தன இராமகாதையில் எங்கேனும் கூறவிலலே. அப்படியிருக்க, 'எத் திருக்கும் கெடும்' என்ற வசிட்டனுடைய எண்ணத்துக்கும், பூமியுடையவும் வேதங்களுடையவும் மகிழ்ச்சிக்கும் என்னதான் அடிப்படை? இங்கு உரையாசிரியர்கள், 'அகப்பகை, புறப்பகை என்று இரண்டு உண்டு. பரதனுக்குப் பணிவிடை செய்தலேயன்றி வேறெதிலும் நாட்டமின்றி இருந்ததனல் சத்துருக்கன் அகப்பகை வென்றவன் ஆகிறன். இலவணசுரன் முதலியவர்களே அழித்ததனல் அவன புறப்பகையையும் வென்றவன் ஆகிறன்' என்று கூறுகிறர்கள். ஆனல், சத்துருக்கன் இலவணசுரனே வென்றதோ கம்பனுடைய இராமகாதையில் இல்லே. ஆக, அகப்பகை என்பதற்கு உரையாசிரியர் கூறும் விளக்கத்தை ஒப்புக்கொண்டால் சத்துருக்கன் அகப்பகையை வென்றன் என்பது மாத்திரமே நிற்கும். 'எத் திருக்கும் கெடும்'—அதாவது எத்தகையதான பகையும் அழியும் என்றன்றே வசிட்டன் நினேந்தான்? இனி, சத்துருக்கனின் பிறப்பினல பூமியும் வேதங்

களும் மகிழ்ச்சி கொண்டதற்குக் காரணம் உண்டா என்பதை இறுதியில் பார்ப்போம்.

தசரத புத்திரர் நால்வரும சதுர் மறை என வளர்ந்து வருகின்றனர் வசிட்டன் அவர்களுக்கு மறையி னொடு ஒளி அரு கலையும கற்றுத் தருகிறுன யானை, இரதம, குதிரை ஆகிய ஏற்றங்களையும் படைக்கலங் களையும போரில உபயோகிக்கும முறையையும் வில வித்தையையும கற்றுக் கொள்கிருர்கள. அருமறை முனிவரும், அமரரும, அவனித் திரு வும், நகருறை சனமும அரச குமாரர்களைப் பெரிதும விரும்பு கிருர்கள இராமனும இலக்குவனும எங்குச செல்லினும இணை பிரியாமலே இருக்கிருர்கள. அவர்களைப்போலவே பரதனும் சத்துருக்கனும இணை பிரியாமல் இருக்கிருர்கள் இதனைக் கவிஞன்,

'............ ... ... எனை ஆள்
வரதனும் இளவலும என மருவினரே.'

(பால காண்டம்—
திரு அவதாரப படலம், 126)

என்று கூறுவான்.

அடுத்து, சத்துருக்கனைப் பற்றிய குறிப்பு நமக்குக் கிடைப்பது, இராம இலக்குவரோடு மிதிலை சென்ற விசுவா மித்திரன் ஜனக மகாராஜனுக்குத் தசரதனுடைய முன்னேர்களைப்பற்றி யும் தசரதனைப்பற்றியும அவன் புத்திரரைப்பற்றியும விரித்துக் கூறும் சந்தர்ப்பத்தில்தான், தசரதன புதல் வர்களைப் பெற்றதைக் குறிப்பிடும் பொழுது, இலக்குவனையும் சத்துருக் கனையும் சுமித்திரை ஈன்றெடுத்ததை,

'அருவலிய திறலினர் ஆய்,
அறம் கெடுக்கும் விறல அரக்கர்
வெருவரு திண திறலார்கள்,
வில் ஏந்தி வரும் மேருப்
பருவரையும், நெடு வெள்ளிப
பருப்பதமும போலவார்கள
இருவரையும், இவ இருவர்க்கு
இளையாளும் ஈன்று எடுத்தாள்.'

(பால காண்டம்—
வரலாற்றுப படலம், 24)

என்று பாடுவான இங்கு இருவரை யும் ஒருங்கு சேர்த்தே விசுவாமித் திரன வாயிலாகக் கவிஞன் குறிப் பிடுகிருன். இருவருமே பிறரால் வெலலுதற்கரிய திறல வாய்ந்தவர் கள என்றும, அறம கெடுக்கும அடல அரக்கர் அஞ்சுதற்குக் காரண மான திணதிறலார என்றும, பெரிய மேருமலையும நீண்டு பருத்த கயிலை யங்கிரியும விலலெடுத்ததைப்போல தோன்றுபவர்கள என்றும அவர் களை வாணிக்கிருன. இலக்குவனும் சத்துருக்கனும முறையே பொன்னிற மும வெண்ணிறமும படைத்தவர் கள் என்பதற்காக அவர்களை முறையே மேரு மலைக்கும கயிலையங்கிரிக்கும ஒப்பிட்டுப் பிரித்துக் காட்டுகிருன் என்பதைத் தவிர, அவர்களிடையே வேறெந்த வேறுபாடும் இருப்பதாகக் கவிஞன் கூறவில்லை. ஆனல், அறம் கெடுக்கும அடல அரக்கர் சத்துருக் கனுக்கு ஏன் அஞ்சவேண்டும் என்பது, முன்னர எடுத்துக் காட்டியதுபோல, பின்வரும கதைப் போக்கிலிருந்து தெரியவில்லை. தசரத புத்திரர் நால வரும,

'தலை ஆய பேர் உணர்வின்
கலை மகடகுத் தலைவர் ஆய்,
சிலை ஆயும் தனு வேதம
தெவ்வரைப போல் பணி செய்ய
கலை ஆழிக் கதிர்த திங்கள்
உதயத்தில் கலித்து ஓங்கும்
அலை ஆழி என வளர்ந்தார
மறை நான்கும அனையார்கள்.'

(பால காண்டம்—
வரலாற்றுப படலம், 25)

பின்னர், இராமன், சிவதனுசை ஒடித்த பிறகு மிதிலையிலிருந்து வந்த செய்தி கேட்டு, தசரதன் மிதிலை நோக்கிப் பரிவாரங்களுடனும் குடும பத்துடனும் புறப்பட்டுச் செல்கிறான். அப்போது பரதனும் சத்துருக்கனும் உடன் செல்கிறார்கள். அப்படி அவர் கள் சென்றதை,

'திருவளர் மாாபா, தெய்வச்
சிலையினர், தோர், வீரர்,
இருவரும், முனி பின் போன
இருவரும், என்ன, போனார்.'

(பால காண்டம—
எழுச்சிப படலம், 71)

என்று கூறுவான் கவிஞன். இங்குக் கூர்ந்து நோக்கத் தக்கது என்ன வென்றால, பரதனையும் சத்துருக்க னையும் சேர்த்துக் கூறும்போதெல் லாம் அவர்கள் இருவரும் இராம-இலக்குவரைப் போல இருந்தார்கள் என்று கவிஞன் கூறுவான்; ஒரு தாய் வயிற்றுப் பிறந்த இலக்குவனை யும் சத்துருக்கனையும் சேர்த்துப் பேசும்போதெல்லாம் அவ்விருவரும் ஒரு தன்மையர் என்றே கவிஞன் கூறுவான்.

இப்படிச் சென்ற பரதனும் சத்து ருக்கனும் மிதிலையில் இராமனையும் இலக்குவனையும கணடபோது, தம்பி யர் அண்ணன்மாரை வணங்குகின்ற னர். இதனைக் கம்பன்,

'கரியவன் பின்பு சென்றவன்,
அருங்காதலின்
பெரியவன் தமபி, என்று
இனையது ஓர் பெருமை அப்
பொரு அருங்குமரர், தம
புனை நறுங் குஞ்சியால்,
இருவர் பைங் கழலும, வந்து,
இருவரும் வருடினர்.'

(பால காண்டம—
எதிர்கொள படலம், 25)

என்று பாடுவான் இலக்குவனைக் குறிப்பதற்கு, ''கரியவன் பின்பு சென்றவன்'' என்ற சொற்றொடரை யும், சத்துருக்கனைக் குறிப்பதற்கு ''அருங்காதலின் பெரியவன் தமபி'' என்ற சொற்றொடரையும கவிஞன் ஆளுவதன் நயம கூர்ந்து நோக்கத் தக்கது சததுருக்கன் பரதனுக்குத் தான் தம்பி என்று கூறுமாப் போல, ''அருங்காதலின் பெரியவன் தம்பி'' என்ற சொற்றொடர் அமைந்திருக் கிறது. அருங்காதலின் பெரியவன் என்பதைப் போல் வேறு எந்தச சொற்றொடரும பரதனின் உண்மைத் தன்மையை விளக்கிவிட முடியாது.

இராமன், கோலம் புனைந்து, தேர் ஏறித் திருமண மண்டபத்திற்குச் செல்லும்போது, பரதன் தேரோட்ட இலக்குவனும் சத்துருககனும் கவரி வீசுகிறார்கள். இதனைக் கம்பன்,

'அனையது ஓர் தேரினில்,
அருணன் நின்றெனப்
பனிவரு மலர்ககண் நீர்
பரதன் கோலகொள
குனிசிலைத் தம்பியா
இருவரும் குழைந்து
இனிய பொறகவரி கால்
இயக்க, ஏகினான்.'

(பால காண்டம—
கடிமணப படலம், 72)

என்று கூறுவான். இலக்குவனும் சத்துருக்கனும் இப்போது செய்கிற இதே வேலையைத்தான் பல ஆண்டு களுக்குப் பின்னால் இராமன் முடி சூட்டிக் கொள்ளும்போதும் செய் கிறார்கள். அங்கும் ''இருவரும கவரி வீச'' என்றே கவிஞன கூறுவான். ஒரே ஒரு வேறுபாடு இப்போது மணக் கோலத்துடன தேரேறிச் செல்கிற அண்ணனுக்குக் கவரி வீசு கிறார்கள். பின்னே, அரக்கரை அழித்து வெற்றித் திருமகளுக அயோத்தி திருமபி முடிசூட்டிக்

கொள்வதற்காக அரியணையில் அமர்ந் திருக்கும் மன்னனுக்குக் கவரி வீசப் போகிறார்கள். இரண்டு நிகழ்ச்சி களுக்குமிடையே கிட்டத்தட்ட பதி னாயிரம் பாடல்கள் இருக்கின்றன. அப்படியிருந்தும் கவிஞன் தான் முன்னர் சொன்னதை மறந்துவிட வில்லை. கம்பனின் தனித் தன்மைக்கு இதுவுமோர் எடுத்துக்காட்டு.

இராமனுடைய திருமணம முடி கிறது. தயரதனுடைய மற்றப் புதல்வர் மூவரும் ஊர்மிளை முதலானோரை மணந்து கொள்கின்றனர். பின்னர், எல்லோரும் அயோதநி திரும்பு கிறார்கள் தசரதச் சக்கரவர்த்தி முன்னே செல்கிறான். மிதிலை நன மாநகர் உறைவார் மனம் மிகுதி யாகப் பின்னே செல்கிறது. இவை இரண்டுக்கும நடுவே,

**'தன் ஏர் புரை தரு தம்பியர்**
**தழுவிச் செல, மழைவாய்**
**மின்னே புரை இடையாளொடும்,**
**இனிது ஏகினன் வீரன்.'**

*(பால காணடம—*
*பரசுராமப படலம், 4)*

இடையிலே பரசுராமன் எதிர்ப்படு கிறான். அவனுடைய அகந்தை இராம னால் அடக்கப்பட்ட பிறகு எல்லோரும அயோத்தி சேர்கிறார்கள். அப்படிச் சேர்ந்து அயோத்தியில் இருக்கும் வேளையில் தசரதன பரதனை அழைத்து, கேகய நாட்டு மன்னன் அவனைக் காண விரும்புவதால் கேகய நாட்டுக்குச சென்று வருமாறு கூறுகிறான. அப் படியே பரதன் ''இளையவன் தன னொடும'' கேகய நாடு போய்ச் சேருகிறான். இவவளவுதான் நாம் சத் துருக்கனைப் பால கண்டத்தில் காண் பது.

அடுத்து, அயோத்தியா காண்டத் தில் அவனைச் சிறிதளவு காண்கிறோம். தசரதன் இறந்த பிறகு பரதனுக்கு அனுப்பப்பட்ட ஓலையின்படி பரதன் அயோததிக்குத் திரும்புகிறான். வழக் கம்போல் சத்துருக்கனும் உடன் வருகிறான. அவன் அப்படிப் புறப் பட்டுச் சென்றதைக் கம்பன்,

**'தழுவு தேரிடைத்**
**தம்பியொடு ஏறினான்;**
**பொழுதும் நாளும்**
**குறித்திலன் போயினான்.'**

*(அயோததியா காணடம—*
*பளளிபடைப படலம, 7)*

என்று கூறுவான். வந்துகொண் டிருக்குமபோது அயோத்தியை நெருங் கியவுடன், அவ் வள நகர் பொலி விழந்து கிடப்பதைக் காண்கிறான். அதைக் குறித்துத் தன் இளவலாகிய சத்துருக்கனைக் கேட்கிறான்.

**'அன்னதன்மை அகநகர் நோக்கினன்**
**பின்னை, அப் பெரியோர்தம் பெருந்தகை**
**மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?**
**என்ன தன்மை? இளையவனே! என்றான்.'**

*(அயோததியா காணடம—*
*பளளிபடைப் படலம, 35)*

மேலும், சத்துருக்கனிடத்திலே, 'இவ் அயோத்தி மாநகரம் நம்மவ ரால் வெல்லப்பட்ட பகைவரின் ஊரைப் போல மெலிந்தும, திருமால் இலக்குமியுடனே நீங்கிவிட்ட பெரிய திருப்பாற்கடலை ஒத்தும் உள்ளதே' பார் என்றும கூறுகிறான. அதைக் கேட்ட சததுருககன் இரு கை கூப்பி இறைஞ்சி,

**எய்தியது**
**ஒருவகைதது அன்று**
**உறுதுயர்; ஊழிவாழ்**
**திருநகாத் திரு தீர்ந்தனள்!**
**ஆம்' என்றான்.**

*(அயோததியா காணடம—*
*பளளிபடைப் படலம், 37)*

இப்படிக் கூறிய சத்துருக்கனைக் கவிஞன் ''குருமணிப் பூண அரசிளங் கோளரி'' என்று குறிப்பிடுவான். 'கோளரி' எனபதற்கு, 'கொல்லும் தன்மையுடைய சிங்கம' என்பது பொருள் சிறந்த இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பட்ட அணிகலன்களை உடைய சிங்கம போனற இளையவனுகிய சத்துருககன் எனபது இவ்வடியின் பொருள். பரதனிடத்துச் சதருக்கன் இவ்வாறு சொல்லியதை ''இரு கை கூப்பி இறைஞ்சினன'' என்று கவிஞன குறிப்பிடுவான். பரதனிடத்துச் சதருக்கன் பாசத்தை விட மரியாதையே அதிகமாக வைத திருநதான் எனபதையே இந்தச் சொற்ருெடர் குறிக்கிறது. சத்துருக கன இங்குப் பேசுவதுதான காப்பியத் திலேயே முதனமுறையாக அவன பேசுவது. இநதப் 'பேசசிலே அவனுடைய பண்பும் தன்மையும ஓரளவு வெளிப்படுகினறன. 'நேர்ந்திருக்கிற துயரம ஒருவகைதது அனறு' என்ற அவனுடைய பேச்சிலேயே அவனுடைய அறிவுத் திறனும யூகிக்கும் சக்தியும் தெரிகின்றன. நேர்ந்திருப்பதோ, கைகேயி முறையற்ற இரணடு வரங்களைத் தசரதனிடத்துக் கேட்டுப் பெற்று, அதன காரணமாக இராமன் கானகம் செல்ல, தசரதன உயிர் நீக்க, நாடு மன்னன இனறி இருக்கிறது. நகரின் பொலிவிழந்த நிலையைக் கண்டதிலிருந்தே பல துயரங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும் என அவன் ஊகித்துவிடுகிருன். அதுபோலவே 'ஊழிக்காலமளவும அழியாது வாழ்வதான அயோததியிலிருந்து இலக்குமி நீங்கினள் போலும்' எனற அவனுடைய பேச்சில் அவனுடைய வேருெரு பண்பும் வெளிப்படுகிறது. திருமால் இலக்குமியோடு நீங்கின பாற்கடலை ஒத்து அயோத்தி இருக்கிறது என்று சொனன பரதனிடத்து, 'இந் நகரத்தைவிட்டு இலக்குமி நீங்கினள் போலும்' என்று சத்துருக்கன் சொலகிருன. பரதனுடைய கூற்றில் இராமனும சீதையும் நகரை விட்டு நீங்கின குறிப்பு இருக்கிறது. சத்துருக்கனுடைய பேச்சிலோ சீதை நகரததை விட்டு நீங்கின குறிப்பு மாத்திரமே தொனிக்கிறது. காரணம் எனனவென்ருல், இலக்குவனுக்கு இராமனே எலலாமாக இருநதது போல் சததுருக்கனுககுப் பரதனே எலலாமாக இருந்தான். ஆகவேதான இராமனுடைய நகர் நீக்கம அவனுககு அவ்வளவு பெரிதாகப் படவிலலை. இலககுமியுடைய நீக்கமே அவன கருத்தில நினறது. ஏனெனில, இலக்குமியுடைய நீக்கததை யாருமே விருமபுவதிலலை.

அடுதது, நாம சததுருக்கனைக காண்பது உணர்சசிகளை நெகிழ்விக்கும் ஒரு கட்டத்தில. தசரதனுக்கு ஈமக் கடனகள் செயயப்போன பரதனைத தடுத்துவிட்டு, சத்துருக்கனைக் கொண்டு ஈமக கடன்களைச் செய்யச் செய்கிருன் வசிட்டன். பின்னா பத்து நாட்களும சாததிர முறைப்படி சடங்குகளைச் செய்கிருன். இவை எலலாம முடிந்த பிறகு, பரதன் காட்டுக்குச் சென்று நாட்டை ஆள்வதற்காக இராமனை அழைதது வர வேண்டுமெனற தன் எண்ணத்தைத் தெரிவிக்கிருன அதற்காகச் சேனையை எழுப்புகினற பணியைச் சத்துருக்கனிடத்து ஒப்படைக்கிருன. அந்தப் பணியை, நமபி நிறைவேற்றுகிருன. சேனையோடு காட்டுக்குப் புறப்படும் ஏந்தலாகிய பரதன்,

'தன்னுடைத் திரு அரைச்
சீரைச் சாத்திருன;
பின் இளையவனெடும்,
பிறநத துன்பொடும்,
நல நெடுந் தேர்மிசை
நடததல் மேயினன்.'

(அயோததியா காண்டம்—
ஆறு செல படலம, 52)

அப்படிப் புறப்படும்போது,

"மந்தரைககூற்றமும,
வழிச செல்வாரொடும்,
உநதியே போதல் கண்டு,
இளவல ஓடிப போய்,
அந்தரதது எறறுவான்
அழன்று பற்றுகிறுன்"

அதனைக் கண்ட பரதன, அவனைச் சமாதானப்படுததுகிறுன. முனனையர் முறைகெட முடித்த பாவியாகிய கைகேயியைச சினனபினனம செயது தன் சினததைதத தீர்ததுக் கொள்ளாமல் தான இருப்பதற்கு, அவள் தன்னுடைய அனனை எனபது காரணமனறு, ஐயனுகிய இராமன அதனை அங்கிகரியாமல் தனனைத் துறந்து விடுவானே எனற அசசமதான காரணம. ஆகையால, அந்தமில் வேதனைக கூனியை விட்டிடுதல சரியானது என்று கூறி, சததுருககனைத் தடுதது, அவனைத் தனனேடு அழைத்துக கொண்டு மேறசெலகிறுன. இப்படிச் சொல்லுமபோது, சததுருககனை "கோது இலா அருமறை குலவும நூல் வலாய" எனறு பரதன விளிக்கிறுன். இப்படி விளிக்கும்போது, அண்ணன் வெறுககும் காரியத்தைச் செய்யக் கூடாது என்றும், பெண் கொலை பெரும பாதகம என்றும சத்துருக்கனுக்குக் குறிப்பாக உணர்த்துகிறுன் பரதன். கடைசியாக, பரதனுடையவும சத்துருக்கனுடையவும், தோற்றததையும நிலையினையும குகன மிக நெருக்கத்தில காண்கிறுன. "நம்பியும என் நாயகனை ஒக்கின்றுன்; அயல் நின்றுன், தம்பியையும் ஒக்கினறுன்" எனறு கூறுகிறுன். "அயல் நின்றுன தமபியையும் ஒக்கின்றுன" எனற கூற்று முன்னர் எடுத்துக்காட்டிய கருததினை வலியுறுத்தும். இலக்குவனுடைய நிறம் பொன்னிறம்; சததுருக்கனுடைய நிறம வெண்ணிறம; என்பது முன்னரே எடுததுக்காட்டப்பட்டது. அப்படியிருந்தும சிறிது தூரத்திலிருக்கும சத்துருக்கனைக் கண்ட குகன, இருவரும ஒருவரையொருவர் ஒத்திருக்கினறனர் எனறு கூறுவானேயாஞல, அவ்விருவரும தமமிடையேயுள்ள நிற வேறுபாட்டுக்கிடையிலும் தோற்றம தெரிவிக்கும் தனமையில் ஒத்திருந்தனா எனபது தெளிவாகும். "தவ வேடம தலை நினறுன்" எனறு ஒருமையிலிருப்பதால இச்சொற்றெடா பரதனையே குறிக்கும் எனறு கொண்டாலும, சத்துருககன இலககுவனை ஒக்கினறுன் என்று கூறுவதால, இலக்குவனும மரவுரி தரிதது தவவேடம கொண்டிருநததால, சததுருககனும அப்படியே செய்திருந்தான் என்றுதான் கொள்ள முடியும; கொள்ளவும வேண்டும். அதன பிறகு, சததுருக்கனைப்பற்றி விரிவான குறிப்பு எதுவும் அயோத்தியா காண்டததில இலலை. கங்கையைக் கடந்து செலவதற்காகப் பரதன் ஏறிய ஓடததில சததுருககனும தாயர் மூவரும சுமந்திரனும ஏறினர் என்று கவிஞன் கூறுமபோது,

'தன அன தம்பியும,
தாயர் மூவரும,
சொனனதேர் வலவனும்,
தூய தோழனும்,
துன்னினர் ஏறலும்,
துழா துடுபபு எனும்
நல் நயக் காலினுல்
நடத்தல மேயினுன்.'

(அயோததியா காணடம—கஙகை காண படலம—மிகைப பாடல, 3,
கமபராமாயணம—எஸ ராஜம பதிபபு,
குறிபபு இப பாடல சில பிரதிகளில இலலை )

"தன அன தம்பி" எனபது சத்துருக்கனைக் குறிக்கும் சொற்றெடர்.

இதற்கு இரண்டு விதமாகப் பொருள் கொள்ளலாம். தனனைத்தானே ஒத்த—அதாவது, தனக்கு வேறு உவமையில்லாத தம்பி என்பது ஒரு பொருள், இரண்டாவது பொருள், தன்னை ஒத்த—அதாவது, பரதனை ஒத்த தமபி என்பது. எப்படிப் பொருள் கொள்ளினும் அது சத்துருக்கனுடைய சிறப்பை எடுத்துக் காட்டுவதாகவே அமையும்.

கடைசியாக, பரதன் சேனையை நிறுத்திவிட்டு, இராமன் இருக்கும் இடத்திற்குச் சத்துருக்கனுடன் சென்று இராமனை அணுகுகிறான். இதனைக் கம்பன்,

"...................... .
. . . . . . . . . . . . .
. . ..... பரதனும்,
நிமிர்ந்த சேனையை,
'பின் தருக' என்று தன
பிரிவு இல் காதலின்,
தன் துணைத் தம்பியும்
தானும் முந்தினை."

(அயோதநிய காணடம—
திருவடி சூட்டு படலம, 48)

என்று குறிப்பிடுவான். 'தன பிரிவு இல காதல தன் துணைத் தம்பி' என்ற சொற்றொடரிலேயே பரதனிடத்துச் சத்துருககன வைததிருந்த எலலையற்ற ஈடுபாடும் அளவற்ற அன்பும், பரதனுக்குத தமபியாக மட்டுமனறித் துணைவனுகவும சத்துருக்கன் இருந்தான என்பதும நன்கு வெளிப்படுகின்றன இதற்குப் பின திருவடி சூட்டு படலத்தில நிகழ்ந்த எந்த நிகழ்ச்சியிலும பேச்சிலும சத்துருக்கனைப்பற்றிக் கவிஞன் எதுவுமே தனியாகவோ பரதனேடு சேர்ததோ சொல்லவில்லை.

பாலகாண்டம, அயோத்தியா காண்டம் ஆகிய இரு காண்டங்களில் இப்படியாகக் காணப்படுகிற சத்துருக்கனைப்பற்றிய எந்த பேசசுமே ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம் ஆகிய மூன்று காண்டங்களிலும் அறவே இல்லை. யுத்த காண்டத்தில்கூட, இறுதியாக மீட்சிப் படலத்தில்தான அவன் காட்சியளிக்கிறுன. இடையே பரதனைப் பற்றியாயினும் ஓரிரு பேச்சுக்கள் வருகின்றன. சுக்கிரீவன் போருக்கு அழைக்க, அவனேடு பொருதற்காக வருகின்ற வாலியின் தோற்றத்தை வியந்து கூறிய இராமனிடத்து, தன தமையனைக் கொல்வதற்காக, இராமனைக் கொண்டு வந்து நிறுத்திய சுக்கிரீவனைப்பற்றிச சற்று இழிவாக இலக்குவன் சொன்ன போது,

'அத்தா! இது கேள' என,
ஆரியன் கூறுவான், 'இப்
பித்து ஆய விலங்கின்
ஒழுங்கினைப் பேசல் ஆமோ?
எத்தாயர் வயிற்றினும், பின்
பிறநதாாகள் எல்லாம்
ஒததால், பரதன் பெரிது
உத்தமன் ஆதல் உண்டோ?'

(கிடகிநதா காணடம—
வாலி வதைப படலம, 43)

என்று இராமன இலக்குவனிடததுச் சொல்லுமபோது பரதனைக் குறிப்பிடுகிறுன். அசோக வனத்தில் சிறையிருக்கும சீதை பழைய நிகழ்ச்சிகளை நினைவு கூர்கிறுள். சடாமுடியுடன் இராமனைத் திருமபியழைததுப் போவதற்காகப் பரதன சித்திரகூடததிற்கு வந்ததையும் அவன தோற்றததைக் கண்டு இராமன இரங்கி ஏங்கியதையும் நினைத்துப் பார்க்கிறுள். இங்கும் பரதனைப்பற்றிய பேச்சுக் காணப்படுகிறது இந்திரஜிதது மாயா சீதையைக கொனறுவிட்டு அயோத்தி நோக்கிச செல்வதாக வடக்கு நோக்கிப் போக்குக் காட்டியதை உண்மை எனறு நம்பிய அனுமன, இராமனிடம அதைச சொல்ல, இராமன் பெருந்துயரில ஆழ்கிறுன். அப்போது

இலக்குவன், இந்திரஜித்தால் பரதனை வெல்லமுடியாது என்றும்,

**'தீக் கொண்ட வஞ்சன் வீச,**
**திசைமுகன் பாசம் தீண்ட,**
**வீக் கொண்டு வீழ,**
**யானோ பரதனும்?'**

(யுத்த காண்டம்—
மாயா சீதைப் படலம், 82)

என்று கேட்கிறான். ஆக, இங்கும் பரதன் பேசப்படுகிறான். இம் மாதிரியாக, பரதனைப்பற்றிய பேச்சுக்கள் ஒன்றிரண்டு இங்குமங்குமாக இருக்க, சத்துருக்கனைப்பற்றிய எந்தப் பேச்சுமே இல்லை. என்றாலும், இறுதியாகச் சத்துருக்கனை மீட்சிப் படலத்தில் கவிச் சக்கரவர்த்தி காட்டும்போது அவனை மாபெரும் உத்தமனாகக் காட்டிவிடுகிறான் இதுவரையிலும, அவனைப்பற்றிப் பேசாத பிழைக்கும பரிகாரம செய்தாற்போல, வான்மீகி படைக்காத ஒரு புதிய காட்சியைப் படைதது அதில சததுருககனுககு ஓர் உன்னதமான இடத்தைக் கொடுத்துவிடுகிறான.

நந்தியம்பதியில இருக்கும பரதன, இராமன் திரும்பி வருவதறகான நாள் எது என்று ஆலோசிக்கிறான. இராமன திருமபி வர வேண்டிய நாள் இதுதான என்று சோதிடாகள் கூறுகிறார்கள். அதைக கேட்டு, பரதன மூர்ச்சிதது விழுகிறான பினபு பல வாறு புலமபுகிறான இறுதியாக, 'மனதது மாசு என உயிரொடும வாஙகுவேன' என்ற முடிவுககு வருகிறான உடனே சத்துருக்கனை அழைததுவரச சொல்கிறான. மூவாக்கும பின்னுளான் வந்து சேர்கிறான். தொழுது நின்ற தன தமபியைத தோய் கணீர எழுது மார்பத்து இறுகத் தழுவினான் பரதன். தழுவி, அழுது, "நான் உன்னிடம் வரம் ஒன்று வேண்டப் போகிறேன். அது நின்னால் தரப் பாற்று" என்று கூறி, தொடர்ந்து "அவ் வரம் என்ன வென்று கேட்பாயாகில், சொன்ன நாளில் இராகவன தோனறிலன்; மினனு தீயிடை யான் இனி வீடுவென; நீ மன்னன் ஆதி, என் சொல்லை மறுக்காதே" என்கிறான். இப்படி, பரதன் சொனனவுடன் சத்துருக்கன் என்ன செய்தான்; என்ன சொன்னான என்பதை மிக அற்புதமாகக கம்பன் எடுத்துக் காட்டுவான. பரதனுடைய இவ் வார்த்தைகளைக் கேட்ட சத்துருக்கன தன் கைகளால் தன் காதுகளைப் பொத்திக் கொண்டு, துணுக்குற்று, ஊட்டப்பட்ட நஞ்சினை உண்டவனின் நிலையை ஒத்தான். கண்களும் மனமும் நடுங்கத் தொடங்கிவிட்டன. இந்த இடததில கம்பன சத்துருக்கனைத் 'தோனறல' என்று குறிப்பிடுவான. கீழே விழுகிறான்; தொடர்ந்து விம்மிக்கொண்டிருக்கிறான்; பெருமூச்சுவிடுகிறான். பின்னர் எழுந்து பரதனைப் பார்த்து ஒரு கேள்வி கேட்கிறான. அதுதான், 'நான் உனககு என்ன பிழை செய்தேன?' என்ற கேள்வி. இது வெறும் கேள்வியாக மட்டும் வரவில்லை; அரற்றலாகவே வருகிறது. அக்கணத்தில் கொழுந்துவிட்டெரியும கோபத்தையுடைய வஞ்கச சத்துருக்கன தோன்றுகிறான். 'உனக்கு நான் என்ன பிழை செய்தேன?' என்ற கேள்வியிலேயே சததுருககனுடைய உததம குணங்கள் அனைத்தும ஒருங்கே வெளிப்படுகின்றன. 'மன்னன ஆதி' என்றுதான் பரதன் சொனனான். அந்தச் சொலலே சத்துருக்கனுடைய உயிரை உண்ணும் நஞ்சாகிறது. அது தனக்கு விதிக்கப்பட்ட மாபெரும் தண்டனை

என்று அவன் கருதுகிறான். 'இந்தத் தண்டனையை நான் அடைவதற்கு— இந்தத் தண்டனையை நீ எனக்கு அளிப்பதற்கு நான் என்ன பிழை செய்தேன்?' என்று பரதனைக் கேட்கிறான். இந்த நிகழ்ச்சியைக் கவிஞன் எப்படி எடுத்துக் காட்டுகிறான் என்று பாருங்கள்.

"கேட்ட தோன்றல் இளர் தடக்கைகளால்
தோட்ட தன் செவி பொத்தி, துணுக்குற்று
ஊட்டு நஞ்சம் உண்டான் ஒத்து உயங்கினான்;
நாட்டமும் மனமும் நடுங்கா நின்றான்."

"விழுந்து, மேக்கு உயர
விம்மலன், வெய்து உயிர்த்து,
எழுந்து, 'நான் உனக்கு
என்ன பிழைத்துளேன்?
அழுந்து துன்பத்தினாய்!'
என்று அரற்றினான்-
கொழுந்துவிட்டு நிமிர்கின்ற
கோபத்தான்."

(யுத்த காண்டம்—
மீட்சிப் படலம், 62-63)

'நான் உனக்கு என்ன பிழை செய்தேன்?' என்று தான் கேட்ட கேள்வியின் பொருளை சத்துருக்கனே விளக்குகிறான். "தசரதனுக்குப் புத்திரராக நால்வர் பிறந்தோம். முறைப்படி தனக்குக் கிடைக்க வேண்டிய ஆட்சியை விட்டுவிட்டு ஒருவன் வனத்துக்குச் சென்றான். அவனைக் காத்துப் பின் போனான் அவன் தம்பியருள் ஒருவன். அப்படிக் காட்டுக்குச் சென்ற அண்ணன் திரும்பி வருவதற்குரிய காலம் கடந்து விட்டது என்று துன்பப்பட்டு இறக்க முயல்கிறான் இன்னொரு தம்பி. மற்றொரு தம்பியாகிய நானே வெட்கம் கெட்டு இந்த அரசை ஆள்வேன்? என்ன இவ்வரசாட்சி" என்கிறான். இராமன், பரதன், இலக்குவன் ஆகியவருக்குப் பின் பிறந்த தம்பியாகிய தனக்கு மற்றவர்களுக்கு இருக்கிற உடன் பிறப்பன்பு இல்லையா? அவர்களால் ஒதுக்கித் தள்ளப்பட்ட ஆட்சியை ஏற்றுக் கொள்வதற்குத் தான் என்ன அவ்வளவு கேவலமானவனா? குறித்த காலத்தில் இராமன் திரும்பி வரவில்லை என்பதற்காகப் பரதன் உயிர் விடத் துணிந்திருக்கும்போது, தம்பியாகிய தானா ஆட்சியை ஏற்றுக்கொண்டு மகிழ்ந்திருக்கப் போகிறவன்? இராமனிடத்துப் பரதனும் இலக்குவனும் வைத்திருக்கிற அன்பும் பாசமும் தனக்கும் இல்லையா? இந்த இராச்சியமானது அத்தகைய அன்பையும் பாசத்தையும்விட இனிமையானதா? என்றெல்லாம் சத்துருக்கனன் தன்னுடைய உணர்ச்சிகளைக் கொட்டிவிடுவதாகப் பரதனுக்கு அவன் அளிக்கும் இந்த விடை அமைந்துவிடுகிறது. சத்துருக்கனுடைய இந்த விடையை எடுத்துக் கூறும் கம்பனின் பாட்டு,

"கான் ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்து, பின்,
போனானும் ஒரு தம்பி; 'போனவன்
தான் வரும் அவதிபோயிற்று' என்னா
ஆனாத உயிர்விட என்று அமைவானும்
ஒரு தம்பி; அயலே நாணாது,
யானும் இவ்வரசு ஆளவென்? என்னே,
இவ் அரசாட்சி இனிதே அம்மா!"

(யுத்த காண்டம்—
மீட்சிப் படலம், 64)

என்பது. சுருங்கச் சொன்னால், 'இராமனுக்குப் பின் பிறந்தாரில் இராமனைப் பிரிந்திருக்க முடியாமல் ஒரு தம்பி அவனோடு காட்டுக்கு ஏக, அவன் திரும்பி வரவில்லையே என்று மற்றொரு தம்பி உயிரை விடத் துணிய, அரசை ஏற்றுக் கொள்வதாகிய இந்த வெட்கங்கெட்ட செயலைச் செய்ய என்னைத்தான் நீ தேர்ந்தெடுத்தாயோ?' என்று சத்துருக்கன் பரதனைக் கேட்குமாப்போல இந்தக் கூற்று அமைந்திருக்கிறது.

இதுவரையிலும் தசரத புதல்வரா முதல் மூவரோடு தன்னையும் சேர்த்துச் சத்துருக்கன் பேசுகிறான். அந்தப் புதல்வர் நால்வரில், இராமனை என்றும் எங்கும் விட்டுப் பிரியாமல் இலக்குவன் இருந்ததைப் போல, பரதனை என்றும் எங்கும் விட்டுப் பிரியாமல் சத்துருக்கன் இருந்தான் என்பதைக் கவிஞன் முன்னமே எடுத்துக் காட்டியதைக் கண்டோம். பரதனுக்கும் தனக்குமுள்ள இந்தப் பிறப்புறவை அடிப்படையாக வைத்துச் சத்துருக்கன் தொடர்ந்து பேசுகிறான், ''இராமன் காட்டிற்குச் சென்ற பிறகு வளமிக்க அயோத்தி நகரில் மகிழ்ச்சியோடு பரதன் வாழ்ந்தான்'' என்று உலகம் சொல்லும் என அஞ்சி, அந் நகருக்குப் புறம்பாக நந்திக்கிராமத்தில் அரச வேடம் தாங்காது தவவேடம் தாங்கி நீ அரிய தவம் செய்து கொண்டிருந்தாயே! உனக்குப் பின் பிறந்தவன் இந்தச் சத்துருக்கன் என்ற எண்ணம் உனக்கு இருந்தால் நீ இறந்ததற்குப் பின் நான் உயிர் வாழ்வேன் என்று எப்படிக் கருதினாய்? உனக்குப் பின் நான் உயிர் வாழவே மாட்டேன். அப்படி உயிர் வாழ்ந்திருப்பதும் வெண்கொற்றக் குடைக்குக்கீழ் இருந்து அரசாட்சி செய்வதும் ஒன்றுதான்'' என்று கூறுகிறான். அதாவது, ''உனக்குப் பின் நானும் மாய்வது திண்ணம். ஆகையால், நான் ஆட்சியை ஏற்றுக் கொள்வது என்ற பேச்சுக்கே இடமில்லை. அப்படி நான் உயிர் வாழ்வதும் ஆட்சியை ஏற்றுக் கொள்வதும் ஒன்றே தான்'' என்கிறான். ''நானோ யானும் இவ்வரசாள்வென்? என்று முன்னர் கூறினானல்லவா? ''நானோ யானும் உயிர் வாழ்வென்?'' என்று சத்துருக்கன் கேட்பதை வற்புறுத்துவதற்காகவேதான் உயிர் வாழ்வதும் ஆட்சியை ஏற்றுக்கொள்வதும் ஒக்கும் என்று' கவிஞன் கூறுகிறான். இதனைக் கம்பன்,

''மன்னின் பின் வள நகரம் புக்கு
இருந்து வாழ்ந்தானே பரதன் என்னும்
சொல் நிற்கும'' என்று அஞ்சி, புறத்து
இருந்தும், அருந்தவமே தொடங்கினாயே!
''என்னின் பின் இவன் உளனும்'' என்றே
உன் அடிமை உனக்கு இருந்ததேனும்,
உன்னின் பின் இருந்ததுவும், ஒரு குடைக்கீழ்
இருப்பதுவும் ஒக்கும்' என்றான்.

(யுத்த காண்டம்—
மீட்சிப் படலம், 65)

என்ற பாட்டிலே எடுத்துக் காட்டுவான் இதுதான் கம்பனுடைய இராமகாதையில் சத்துருக்கன் இரண்டாம் முறையாகவும் இறுதி முறையாகவும் பேசும் பேச்சு. இப் பேச்சிலே அவனுடைய உத்தம உயர் குணங்கள் அத்தனையும் ஒருங்கே தோற்றமளிக்கின்றன. இந்தப் பேச்சினைக் கவிஞன் எடுத்துக் கூறுகின்ற முறை, சத்துருக்கனை, ஓர் உயர்ந்த, பவித்திரமான பாத்திரமாகக் காட்டிவிடுகிறது. கதையிலே அவன் ஒரு சிறு பாத்திரம்; அவனை மிகச் சிறிய அளவிலேயே பார்க்கிறோம் என்பதை அறவே மறக்கச் செய்து விடுகிறது. இத்தகைய உத்தம குணங்கள் நிறைந்திருந்தமையால்தான் சத்துருக்கன் பிறப்பினால் பூமியும் வேதங்களும் மகிழ்ச்சியினால் துள்ளி ஆடின என்று கவிஞன் முன்னர்ப் பாடினான் என்று கொள்ள முடியும்.

சத்துருக்கனுடைய இந்தப் பேச்சுக்குப் பிறகு, தான் இறப்பதற்கு எரியமைக்குமாறு பரதன் அவனை ஏவுகிறான். செய்தியறிந்த கோசலை விரைந்தோடி வந்து விலக்க முயன்றும் கேளாமல், அக்கினியை அடுத்துப் பரதன் பூசை செய்கிறான். அந்த வேலையில் அனுமன் வந்து எரியை அவிக்கிறான். இராமன் வந்து சேர்ந்த பிறகு பரதனோடு சத்துருக்கனும் இராமனை வணங்குகிறான். பரத-சத்துருக்கருக்கு இராமன் தன்னுடன்

3

வந்த துணைவர்களை அறிமுகப் படுத்தி வைக்கிறான். கடைசியாக முடிசூட்டு விழாவின்போது சேர்ந்து சத்துருக்கனும் கவரி வீசுகிறான். இவ்வளவுதான் சத்துருக்கனுடைய கதை.

வால்மீகி செய்யாத ஒரு பெரும் செயலை, பரதனுடைய தீக்குளிப்பு நிகழ்ச்சியில் கமபன் செய்துவிடு கிறான. கமபனுடைய இந்தக் காட்சி யினால் இராம காதையின் பல முககியப் பாததிரங்களுடைய பெருமை பன் மடங்கு பெருகுகிறது. பரதன், தன் னுடைய அண்ணன் குறித்த நாளில் மீளாமை கண்டு தன உயிரைப் போக் கிக் கொள்ள முயன்றதில் தன பெருமையை உயர்த்திக் கொள் கிறான். அவனை, அச் செயலிலிருந்து தடுக்கும் முயற்சியில், ''நீ இறந் தால இப்பொழுதே உலகு இறக் கும், புண்ணியம் எனும் நினனுயிர் போயினால், மண்ணும் வானும் உயிர் களும் வாழுமோ?; எண்ணில் கோடி இராமர்கள் எண்ணினும் அண்ணல நின் அருளுக்கு அருகு ஆவரோ? எனறெல்லாம் கூறுவதன்மூலம் கோசலை தன் பெருமையை எண் ணில் கோடி மடங்காகப் பெருக்கிக் கொள்கிறாள். தந்தை வேகமும், தன் நாயகன தனிச் சிலையின முந்து சாயகக் கடுமையும், பிற்பட முடுகி, சிந்தை பின்வர, வேகமாக, சரி யான சமயத்தில் வந்து எரியை அவித்துப் பரதனுடைய உயிரைக் காதது அதன்மூலமாக இராமனது உயிரையும உலகையும் காத்த அனுமன் தன திறனையும பணியின் சிறப்பையும் பன்மடங்கு பெருக்கிக் கொள்கிறான். இம் மூவரையும் ஒத்து அவர்களுடைய வரிசையில் சத்து ருக்கனும் குணத்தின் குன்றாகவும் உத்தமத் தம்பியாகவும பண்புப் பெட்டகமாகவும் பொலிந்து நிற்கிறான.

# இராமாயண சாரம்

திரு உ. வே. கி. வரதாச்சார்ய சுவாமிகள்

திருவரங்கத்தமுதனார் இராமானுசனை இராமானுச நூற்றந்தாதியில் ''படி கொண்ட கீர்த்தி இராமாயண மென்னும் பத்தி வெள்ளம குடி கொண்ட கோயில இராமானுசன்'' (37) என்று குறிப்பிடுகிறார்

''பூமியையடங்கக் கொண்டிருக்கும கீர்த்தியையுடைத்தான ஸ்ரீராமாயண மாகிற பகதிஸாகரம நித்யவாஸம பண்ணுவதொரு திவ்யஸ்த்தாநமா யிருக்கிற எமபெருமானார்'' எனறு பெரிய ஜீயரான மணவாள மாமுநி களும, ''இருப்பிடம வைகுந்தம வேங்கடம மாலிருஞ் சோலையென்றும் பொருப்பிடம மாயனுக்கு'' எனறு, பரம புருஷனுக்கு அவையெல்லாம் கோயிலகளாமாப் போலே, ஸ்ரீராமா யணம் என்கிற பக்தி ப்ரவாஹத்துக்கு இவரும ஒரு கோயிலாகக் காணும இருப்பது'' என்று பிள்ளைலோகம ஜீயரும வியாக்யானமிட்டருளினார்கள். இராமானுசர் தம்முடைய அம்மா னை பெரியதிருமலை நமபியைப் பற்றி, இராமாயண விழுப்பொருளைக் கேட்டறிய, திருவேங்கடமலைகருப் பல தடவை எழுந்தருளினா எனறு குருபரம்பராப்ரபாவ நூல் குறிப்பிடு கிறது. இதனால் நாம் தெளிவது யாதெனில, ஸ்ரீராமாயணத்தில் வேதாந்த விழுப்பொருள்கள் பொதிந்து கிடக்கின்றன என்பதே யாகும. அவற்றில் ஒனறினைக காண் போம. வேதாந்தங்கள், இறைவனுக் கும் ஆன்மாவுக்கும உள்ள தொடர்பு கள் பல என்று கூறுகின்றன அவற் றுள் சரீராத்ம பாவமும் பதிபத்நீ பாவமும் (தலைவன தலைவி பாவம்) சிறந்தவையெனலாம. இறைவன உல குக்கு உயிர் எனனும், ஆன்மா இறைவனுக்கு உடல் எனனும், இப் பொருள் வேதாந்த விழுப்பொரு ளாகும். இப் பொருளைக் கொண்டே இராமானுசர், தமமுடைய கொள் கையை நிலைநாட்டினா எனபது உண்மை இதனை ''யஸய ஆத்மா சரீரம் யஸய ப்ருதிவீ சரீரம ஏஷ: ஸர்வ பூதாந்தராத்மா அபஹதபாப்மா . . நாராயண:'' எனறு வடமொழி மறையும், ''உடனமிசை உயிரெனக் கரந்தெஙகும பரந்து'' என்று தமிழ் மறையாம திருவாய்மொழி யும, ''ஜகத் ஸாவம் சரீரமதே'' என்று வாலமீகி ராமாயணமும, ''அஹமாதமா குடாகேச ஸர்வபூதா

சய ஸ்த்தித:'' என்று கீதையும்; ''தத்ஸர்வம் வை ஹரே: தநு:'' என்று ஸ்ரீவிஷ்ணு புராணமும் கூறுகின்றன. இப் பொருளை ப்ரதாந ப்ரதி தந்த்ரார்த்தம் என்பர் நம் பெரியோர். அஃதாவது ஒரு சமயத்துக்கே உரியதான சீரிய பொருள் என்பதாம். இதுதன்னையே கவிச சக்ரவர்த்தியாம் கம்பரும், ஆரண்ய காண்டம் விராத வதைப் படலத்தில், ''பிந்நமாய் ஒன்ருதல் பிரிந்தேயோ பிரியாதோ, என்ன மா மாயம் இவை ஏனமாய் மண்ணிடந்தாய்'' என்றும, கிஷ்கிநதா காண்டத் தொடக்கத்தில், கடவுள் வணக்கமாக, ''மூன்றுரு எனக்குண மும்மையாம் முதற் தோன்றுரு எவையும் அம்முதலைச் சொல்லுதற்கு ஏன்றுரு அமைந்தவும் இடையில நின்றவும சான்ற உரு உணர்வினுக்கு உவந்த தாயினுன்'' என்றும்,

யுத்தகாண்டம் பிரமன்துதியில்

பகுதி என்று ஊதி யாதினும்
பழையது பயந்த
விகுதியால் வந்த விளைவு மறறு
அதற்கு மேல் நின்ற
பகுதி யாவர்ககும அரிய அ!!
புருடனும் நீ இம
மிகுதி உன் பெரு மாயை
யினல் வந்த வீக்கம்

(மீட்சிப் படலம, 100)

ஐ-அஞ்சு ஆகிய தத்துவம
தெரிந்தறிநது அவற்றின்
மெய எஞ்சாவகை மேல்நின்ற
நினககுமேல யாதும்
பொய் எஞசா விலது எனும்
ஈது அருமறை புகலும
வயயம சானறு இனிச சானறுக்குச்
சான்று இலை வழககால்

(மீட்சிப படலம், 104)

என்னுருக் கொடு இவ் வுலகினை
ஈனுதி இடையே
உன்னுருக் கொடு புகுந்து நின்று
ஓம்புதி உமைகோன்
தன்னுருக் கொடு துடைத்தி மற்று
இது தனி அருக்கன்
முன்னுருக் கொடு பகல் செயும்
தரத்தது முதலோய்

(மீட்சிப படலம, 109)

என்றும் கூறியுள்ளார். இவ்வளவால தேறிய பொருள் இறைவனுக்கு உலகம் உடல் என்பதும் உலகுக்கு இறைவன உயிர் என்பதும் ஆகும.

இத்தொடர்பினுல ஓா சீரிய பொருள் தேறும். அதாவது.--உடல் தனக்குததானே பாதுகாப்பது அனறு; உடலுக்கு உயிரே காப்பாளன எனபதாகும். இதுவே சரணுகதியெனப் படுகிறது உடலான நமககு, உயிரான இறைவன் கைபார்ததிருப்பதே கடமையாகும அறிவு கொணடும ஆற்றல் கொணடும நாம செய்வன அத்தனையும், இறைவன் தொண்டாகும் என்பர் பெரியோர். இதனை சீதையின் வரலாற்ருல அறியலாகும. அறிவும ஆற்றலும் நிரம்பப் பெற்றவர்களுள் தலையானவள் பெரிய பிராட்டியார். அனனுர் சீதையாகத் திருவவதாரம் செய்த காலத்தில், சக்ரவர்த்தித் திருமகன் கைபார்த்திருந்தாள். அத்தனை போக்கி, தன் ஆற்றலைக் கொண்டு தன் பாதுகாப்பினைப் பார்த்திலள் என்பது ஸ்ரீராமாயண சாரமாகும். ஸ்ரீராம பிரானை அண்டை கொண்ட பலத்தாலேயே, சீதை கானகத்தில் கொடிய விலங்குகளைக் கண்டும் இடர் காண வில்லை. இதனை ஸ்ரீவால்மீகி பகவான் ''கஜம்வா வீஷ்ய ஸிம்ஹம்வா வ்யாக்ரம வாதேவராநநா. நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூராமஸ்ய ஸம்ச்ரிதா'' என்றும, கம்பர் ''அருப்பேந்திய கலசத்துணை அமுதேந்திய

மத மா மருப்பேந்திய வெனலா முலை மழையேந்திய குழலாள், கருப்பேந்திர முதலாயின கண்டாள் இடர் காணுள், பொருப்பேந்திய தோளாளொடு விளையாடினள் போனுள்'' என்றும் கூறியுள்ளனர். இராமபிரானுடைய தோள் வலியைப் பெரிது மதித்தாள் சீதை என்பது தெளிவு. ''இலேதுணை மற்றென் னெஞ்சே! ஈசனை வென்ற சிலை கொண்ட செங்கண்மால் சேரா, குலை கொண்ட ஈரைந் தலையான் இலங்கையை ஈடழித்த கூரம்பன் அல்லால் குறை'' (8) என்று திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியிலருளிச் செய்துள்ளார். இப்பாட்டிலுள்ள ''கூரம்பன் அலலால் குறை'' என்ற பகுதிக்கு, வியாக்யாந சக்ரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளை,'' ராவணனுடைய லங்கையை முலையடியே வழி போக்கின அமபின் கூர்மையையுடைய சக்ரவர்த்தித் திருமகனையொழிய, நம்முடைய குறையில் வேருெரு துணையிலலே. எமபெருமானுர் ஸ்ரீபாததததை ஆச்ரயித்தவர்கள், அசேதநக்ரியா கலாபத்தினுடைய கூர்மையை (உயிரில்லாத செயற்கூட்டத்தை) விசுவஸித்திரார்கள் (நம்பமாட்டார்கள்). சக்ரவர்த்தித் திருமகன அமபின் கூர்மையையே யாயிற்றுத் தஞ்சமாக நினைத்திருப்பது'' என்று உரை வகுத்துள்ளார் ''உன்னுலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்'' (5-8-3) எனறு நம்மாழ்வார் திருவாய்மொழியில் அருளிச் செய்துள்ளார். நாட்டிலும காட்டிலும் மட்டுமின்றி, அசோகவனத்திலும இராமபிரானையே தஞ்சமாகக கருதினுள் சீதை என்பதனை நாம் காணலாம. இராவணன் காமவெறி கொண்டு அசோகவனத்தில் சீதையை நோக்கி,

**" இன்று இறநதன நாளையிறந்தன**
**என திறம் தரும் தன்மை இதால் எனைக்**
**கொன்றிறநத பின் கூடுதியோ குழை**
**சென்றிறங்கி மறந்தரு செங்கணுய் "**

**" உலகம் ஒன்றேடிரண்டு ஒருங்கு ஓம்பும் [என்**
**அலகில் செல்வத்து அரசியல் ஆணையில்**
**திலகமே ! உன் திறத்து அனங்கன் தரு**
**கலகமல்லது எளிமையும் காண்டியோ "**

என்றிங்ஙனே பலவாருகப் பேசக் கேட்ட சீதைக்கு, அப்போதே அங்கேயே அவனை நீருகும்படி சபிக்க ஆற்றல் உண்டு; ஆயினும் அவள் இராமபிரான் தோள் வலியையே நோக்கி வாளாயிருந்தாள் என்பது ஸ்ரீராமாயண சாரம். இதனை மேல் வரும் நிகழ்ச்சியில் அறியலாம்.

இராம நாமம பொறித்த மோதிரத்தை அநுமன் பிராட்டியிடம் காட்ட, ''காட்டினன் ஓர் ஆழி அது வாணுதலி கண்டாள்'' ''வாங்கினள், முலைக்குவையில் வைத்தனள்; சிரத்தால் தாங்கினள்; மலர்க்கண் மிசை யொத்தினள்; தடந்தோள் வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு ஏங்கினள்; உயிர்த்தனள்'' என்கிறபடியே, பிராட்டி மோதிரத்தை வாங்கி உச்சிமேல் வைத்து உகந்து, அனுமனை,

''முதல்வன் தூதாய் .... அம்மையாய் அத்தனுய அப்பனே அருளின் வாழ்வே . . வாழிய வள்ளலே யான் மறுவிலா மனததேன் என்னில், ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம், உலகம் ஏழும் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி'' என்று வியந்து பாராட்டி வாழ்த்தினுள். அவ்வமயம் அநுமன் சீதையை இராமனிடம கொண்டு சேர்க்கக் கருதி, ''கேட்டி அடியேன உரை முனிந்தருளல். . . . இராமன் எதிர் நினைக் காட்டி அடி தாழ்வன்''. அடியேன் வார்த்தை கேளாய்; கோபிக்க வேண்டாம். இராமன திருமுன்பே உன்னைக் கொண்டு சேர்த்து அப்பிரான் திருவடிகளை வணங்குவேன்'' என்ருன். இதற்கு உடன்படாது சீதை கூறுகிருள்;

**“ ஏய நன்மொழி யெய்த விளம்பிய
தாயின் முன்னிய கன்று அனையான் தனை
ஆய தன்மை அரியது அன்றும் எனத்
தூய மென்சொல இணைய சொல்லினுள் ”.**

**“ அரிய தன்றுநின் றுறறலுக கேற்றதே
தெரிய எண்ணினை ”**

என்று. அதாவது “தாயப் பசுவிற்கு முன் சென்று நின்ற கன்றினையொத்த அநுமனை நோக்கிப் பிராட்டி, இது உனக்குச் செய்வதற்கு அருமையான தொழிலொன்றன்று, உனது வல்லமைக்குத் தக்கதையே நனகு ஆலோசித்துள்ளாய்,” என்றுள் என்பதாகும். மேலும்,

**“ வேலையின்னிடையே வந்து வெய்யவர்
கோலி வெஞ்சரம் நின்னெடுங் கோத்த
போது,
ஆலம் அன்னவர்க்கு அல்லை ஏற்கும்
அலலையால்
சாலவும் தடுமாறும், தனிமையோய் ”**

என்று. நீ வேறு துணையின்றித் தனிப் பட்டவனுயிருத்தலால், இடைவழியில் அரக்கரை யெதிர்த்து அழித்தலும், என்மீது அவ்வரக்கரது அம்பு படாமல் காத்தலும், ஆகிய இரண்டையும் ஒருங்கு செய்யமாட்டாமல் தடுமாறுவாய் என்கிறுள். மேலும் கூறுகிறுள்:

**“ அன்றியும் பிறிதுளளதொன்று,
ஆரியன்
வென்றி வெஞ்சிலை மாசுனும், வேறினி
நன்றிஎன் பதம் வஞ்சிதத நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும நினைத்தியோ ”**

என்று இராமபிரானது வெற்றியுடைய காடிய வில் பழிப்புறும். கூட்டொருவரை வேண்டாக் கொற்றவனுகிய இராமனுக்குத் தன பொருளைத் தானும் மீட்கவல்லமையில்லாதவன் என்ற ஒரு பெரும் பழிப்பை விளைக்கும். மேலும் என்னைக் கொண்டு என்னைக் காத்துக் கொள்ள இயலாதவளோ நான். அன்று. ஆயினும் இராமன் தூயவன அவன வில்லையே நோக்கியுள்ளேன். அரசிக்கு நெல குத்த ஆற்றல் இருந்தாலும் நெல குத்த (ப்ராப்தி) தகுதி இல்லை. அவள் நெல் குத்தச் சென்றுல் அவளைக் காக்கக் கடவனுன அரசன் பெருமைக் கன்றே கொத்தையாம். இராவணனைச் சபிக்கச் சக்தியுடைவளே நான். ஆயினும் சபித்தாயினும் தனனைத் தானே காத்துக்கொள்ளத் தகுதியில்லாதவள். “சொல்லினுற் சுடுவேன். அது தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு” என்றுள். “பர்த்தாவுக்கு சேஷமான சரீரத்தை அவகாதாதி (நெல் குத்துவது முதலான) வ்யாபாரங்களாலே பதிவ்ரதை ரக்ஷிக்கையாகிறது, பர்த்தாவுக்கு ஸ்வரூப ஹாநியாய் தனக்கும் ஸ்வரூப ஹாநியாயிறே யிருப்பது. ஸ்வரக்ஷணமனுன பர்த்தாவிருக்க, ஸ்வரக்ஷணத்தில் நின்றும் பதிவ்ரதை கைவாங்கினுல், பர்த்தாவே ரக்ஷகனுயறுமோபாதி, இவனும் அத்யந்த பரதந்தரனுயற்றுல், ஈச்வரனேயிறே ரக்ஷகனுயறுவான். ஆகையால் நவத்வாரபுரமான லங்காபுரத்திலே நிருத்தை (அடைபட்டவள்) யான பிராட்டி, “தத்தஸ்ய ஸத்ருபிம் பவேத்” என்று சக்ரவர்த்தி திருமகன் பக்கலிலே ந்யஸ்தபரையாயிருந்தாப் போலே. இருக்கை இவனுக்கு ஸ்வரூபம். இத்தால் ஸ்வரக்ஷணத்தில இழிகை ஸ்வரூப ஹாநி என்றதாயிற்று” எனறருளிச செயகிருர். பரந்த ரஹஸ்யத்தில பெரியவாச்சான்பிள்ளை. “இத்தை (அசோகவநவாஸத்தை) ராவண பலாத்காரத்தாலே வந்ததாக நினைப்பார், இவள் சக்தி விசேஷமறியாத க்ஷுத்ரரிறே, “ஸ்ரீதோபவ” (அநுமனுக்கு) என்னவள், “நஷ்டோபவ” (இராவணனுககு) எனன மாட்டாளன்றே” என்றருளிச் செய்கிருர், ஸ்ரீவசந பூஷண விளக்க உரையில் மணவாள மாமுநிகள். “பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்” என்பது ஸ்ரீவசந பூஷண சூத்திரம இதற்கு விசதவாக் சிகாமணியான மணவாள மாமுநிகள், “ஸ்வசக்தியை விடுகையாவது—நாயகரான பெருமாள் ரக்ஷிக்கு மதததை யல்லது, நம்முடைய சக்தியால் நம்மை ரக்ஷித்துக் கொள்ளுகை நம்

பாரதந்த்ரயத்துக்கு நாசகம் என்று ஸ்வசக்தியைக் கொண்டு கார்யம் கொள்ளாதொழிகை'' என்றருளிச செய்துள்ளார். 'காப்பாரார் இவ் விடத்து'' (திருவாய்மொழி 5-4-7) என்ற பாசுரத்தின் ஈடு வ்யாக்யாநம் இனிமை நிறைந்தது. அஃது இங்கே குறிக்கத்தக்கது. அதாவது:

''தத்தஸ்ய ஸத்ருரம் பவேத்''— அவருக்கு அநுரூபமானவற்றைச் செய்து போகக் கடவ நாம, நம் முடைய ஆற்றாமை பரிஹரிக்கைக் காக அவருக்கு நிறைக்கேடானவற் றைச் செய்யவோ, ராம மஹிஷியை ஒரு ராக்ஷஸன் பிரிக்க, 'அவள் பீபித் துப் போனாள்' என்னுதல், 'ஒரு குரங்கு மீட்டது' என்னுதல் செய்கை யாகிறது, அவர் வில்வலிக்கு வசையாங்காண், அவர் வம்சத்துக் குக்கொத்தையாங்காண். அவர் விஷ யத்தில் ராவணன் செயதத்தை நாமும் செய்யவோ. ராமதநத்தை ''என்னது'' என்றாரோடு ஒப்பர் களிறே, அவருடைய ரக்ஷணத்தைத் தந்தலையிலே ஏறிட்டுக் கொள்ளுமவர் கள்.'' எனறு திருப்பாவை ''புள் ளின் வாய்'' என்ற பாட்டில் ''கிள ளிக் களைந்தானை'' என்ற பகுதிக்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்,'' வீர பத்நியாகையாலே 'கல்லெடுத்து'' எனனு மாபோலே 'கிள்ளி' என்கிறார்கள் என்று உரை வகுத்தருளினார்.

'குத்து விளக்கெரிய' பாட்டில் ''கோட்டுக்கால் கட்டில்'' என்ற பகுதிக்கு நாயனார், ''ஆனைகளை உயிர்ப் பிடியே பிடித்து அவற்றின் கொம்புகளைப் பறிதது, அவற்றை ஆதாரமாகக் கடைந்து மடுத்துச் செய்த கட்டில்; வீரபத்நியாகை யாலே இப்படிச் சமைந்த கட்டிலி லொழிய மற்றையவற்றில கண் ணுறங்குவதாகாதே. வீரபத்நிகள் படி ப்ரபந்நர் படிபோலே" என்று விளக்கம் தந்துள்ளார். திருநெடுந்தாண்டகம் கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்'' என்கிற பாட்டில், ''கல்லெடுதது'' என்ற பகுதிக்கு பெரியவாச்சான் பிள்ளை, ''கல்லெடுத்து: அவனெடுத் தது சோலை சூழ் குன்றாயிருக்க, கல்லெடுத்து''— என்று ஒரு சிலா மாத்ரத்தை யெடுத்தாற் போலே (ஒரு சிறு கல்லை எடுத்தாற்போலே) ஒசழக்காகச (அலக்ஷ்யமாகச்) சொல் லுகிறாள். ஸ்ரீகோவர்த்தநததை எடுதத போதை அநாயாஸத்தைக் கண்டிருந்த வாஸனையாலே. இந்த சக்தியிறே இவளுடைய ஹ்ருதயததில் கிடப்பது. 'கிட்டுவதும, அநுபவிப்பதும், பெறு வதும் ஈஸ்வர சக்தியாலே' என் றிருக்குமவளிறே. 'அசக்தாதிகாரமிது சக்தாதிகாரம் ஸாதநாந்தரங்கள்' என்கிற வார்த்தைகள் நமமாசார்யர் கள் கோஷ்டியிலே புகுரக் கடவ தன்றியேயிறேயிருப்பது. 'சக்தரோடு அசக்தரோடு வாசியில்லை. ஈஸ்வர சக்தியைக் கொண்டு தலையெடுக் கைக்கு' என்றிருக்கும் கோஷ்டி யிறே. ''சீதோபவ ஹநீமத:'' என் கிற சக்தி ஸ்வாஸ்ரயததிலே கிடக்க, ''நராவண ஸஹஸ்ரம்மே யுத்தேப் ரதி பலம்பவேத்'' என்கிற புக்தி யுடையவன் (அனுமன்) ஸ காரி யாகத், தனக்கோ ராற்றாமை அதி சயித்திருகக, ''தததஸ்ய ஸத்ருரம் பவேத்'' எனறிறே ப்ரதமாசார்யை யான பிராட்டியிருந்தது'' என்று விளக்கம் தந்தருளினார். இஃதல்லவா சரணாகதி முறை. இப்படி ஸீதை, நாட்டிலும், காட்டிலும், ராவண பவநத்திலும் (இல்லத்திலும்) இராம பிரானையே தஞ்சமாகக கொண்ட வள் என்பது தெளிவாயிற்று.

ஆக இறைவன் உலகுக்கோர் உயிராகையால் அவனே உலகுக்குக் காவலன்; ஆன்மாக்களுக்குப் பிறரோ தாங்களோ பாதுகாவலர் அல்லர் என்கிற வேதாந்த விழுப்பொருள் சீதையின் வரலாறறால் ஸ்ரீராமாயண சாரமாக அமைகிறது எனபது தேற்றம்.

''வாழி சானகி! வாழி இராகவன்!
வாழி நானமறை! வாழியரந்தணர்!
வாழி நலலறம்!''

# கம்ப ராமாயணத்தில் சில இசைக் குறிப்புக்கள்

திரு என். வி. நாயுடு

சங்க நூல்களில் பயிலும் இசைகளின் பெயர்களையும் பண்களையும் கம்பன் காவியத்தில காண்கிறோம். இசைகளின் பெயர் ஏழு: குரல், துத்தம், கைக்கிளை, உழை இளி, விளரி, தாரம் என்பன. இன்றைய இசைகளில் முறையே மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம், ஷட்ஜம, ரிஷபம், காந்தாரம் (ம, ப, த, நி, ஸ, ரி. க என்னும் குறியீட்டெழுத்துக்களுடன்) வழங்குவன. 'இளி' யை முதல் இசையாகக் கொண்ட 'இளிக் கிரமம்' ஆக ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற வரிசையில் இப்போதைய வழக்கத்துக்கு ஒவ்வும்.

கம்பன் குறிப்பிடும் பண்கள்: காந்தாரம், குச்சரி, காமரம், கொல்லி, செவ்வழி, நைவளம், குறிஞ்சி என்பன. இவை, முறையே மோகனம், கூர்ஜர, மாயா மாளவ கௌள, நவரோஸ், யதுகுல காம்போஜி, நாட்டக் குறிஞ்சி, மலகரி என்னும் இராகங்களை ஒத்தன; ஆயினும், பண்களுக்கும் இராகங்களுக்கும் பல வேற்றுமைகள் உள எனப் பெரியோர் கூறுவர். இராகங்களின் பெயர்களைக் கம்பன் குறிப்பிடவில்லை. கம்பன் காவியத்தில் பல இசைக் கருவிகளைக் குறிப்பிடுகிறான். பொழுதையும் சுவைகளையும் இசையோடு இணைத்துக் கூறுகிறான் இவற்றில் நுழைவோம்.

## ஒலியின் பிறப்பும் கிளைகளும்

இராமனும் இலக்குவனும் கிட்கிந்தைக்கு அருகில் உள்ள குன்றில் கார் காலத்தைக கழிக்கின்றனர். 'மின்னொடும் துவன்றிய மேகராசி' தாரைகள் பொழிந்தபின, மரங்கள் தளிர்த்தன; மயில்கள் ஆடின; குயில்கள் பேசாது அடங்கின; காந்தளும கொன்றையும் இந்திர கோபமும் தோன்றின. அவ் வேளையில் ஓர் ஒலி பிறந்தது:

**'பேடையும் ஞிமிறும் பாயப்**
**பெயர்வுழிப் பிறக்கும் ஓசை**
**ஊடுறத் தாக்குந் தோறும்**
**ஒல்ஒலி பிறப்ப'**

(காரகாலப் படலம், 32)

(பேடை - பெண வண்டு, ஞிமிறு - ஆண வண்டு)

பெண் வண்டும, ஆண வண்டும் மலரில் தேன் அருந்திவிட்டுப் பறப்பதற்காக எழும்போது அமைதியான நிலையில் 'ஒல்' என ஒலி பிறக்கிறது.

அவ் ஒலியின் இசை 'குரல்'; இன்றைய 'மத்யமம்' (ம). வண்டின் ஒலியைத் தமிழர் 'குரல்' என்ற முதல் இசையாகக் கொண்டனர் என்பதற்கு விபுலானந்தர் பல ஆதாரங்களைக் காட்டியுள்ளார்.

ஏழிசையில் முதல இசைக்கு ஐந்தாம் இடத்தில் நிற்பதைத் தமிழர் 'கிளை' என்பர். குரலுக்கு ஐந்தாம் இடம் 'இளி' (ஸ) மத்யமத்துக்கு பஞ்சம ஸ்தானம் ஷட்ஜம்.

வண்டு 'குரல்' இசையைத் தன் சுற்றத்தோடும் பயில்கிறது. பல வண்டுகள் சேர்ந்து ஒலிக்கின்றன. இராமன் அயோத்தி நகரின் வீதி வாய்ச் செல்லும்போது அவன் மார்பில் புரளும் மாலை

**'கிளை பயில் வண்டொடும் கிடந்த'**

(மந்திரப் படலம, 54)

வண்டு தன் கிளையோடும் (சுற்றத்தோடும்) இசை எழுப்பியது; அவ் இசை 'குரலு'க்குக் கிளையான 'இளி' யாக ஒலித்தது.

**'குரலி'னும் வல்லொலி 'விளரி'.**
**அரக்கப் பெண்கள்**

**' விளரிச் சொல்லியர் '**

(ஊர்தேடு படலம, 31)

சீதையின் பேச்சு மென்மையானது. அம் மெல்லிய பேச்சைக் கேட்க விரும்பும் இராவணன் அவளை விளிப்பது:

**'பொருளும் யாழும் விளரியும் பூவையும்**
**மருள நாளும் மழலை வழங்குவாய்!'**

(காட்சிப் படலம், 103)

பொருள் மருள்வது 'மெய் பெரு மழலை' ஆதலின்; யாழ் மருள்வது அவளுடைய கண்டத்தோடு ஒப்ப இசைக்க இயலாததால்; விளரி மருள்வது அதன் வல்லொலியைப் பிறர் கேட்க விரும்பாததால்; பூவை மருள்வது சீதையின் ஒலியைக் கேட்ட அப் புள் அங்குத் தன் இனத்தைக் காணுமையால்.

இலங்கை மாதேவி சினத்தோடு அனுமனை எதிர்ந்தாள். அப்போது அவளுடைய சொல்லைக் கூறும் கவிச் சக்ரவர்த்தி,

**" தெளி நூல் யாழ், அம்**
**தாரத்தின் நேர்வரு சொல்லாள் "**

(ஊர்தேடு படலம, 78)

என்ற தொடரைப் பெய்கிருர். தெளிந்த யாழ் நூலில் கூறப்பட்ட 'தாரம்' (க) என்ற இசைககு ஒத்த சொல் அவளுடையது. 'நில்லாய், நில்லாய்' என அவள் அதட்டலில் விளரியை அடுத்த 'தாரம்' ஒலிக்கிறது. உயர்ந்த ஒலிக்குத் தாழ்ந்த ஒலி படிந்து போகும். பெண்கள் நடக்கும்போது அவர்களுடைய மலர்க் குழலில் அணிந்துள்ள பூக்களில் உள்ள மது நுகரும் வண்டுகள் 'குரல்' (ம) ஒலிக்கின்றன. அவர்களுடைய நூபுரகள் 'துத்தம்' (ப) என்ற ஒலியை எழுப்புவதால் வண்டின் ஒலி மறைகிறது.

**'கள் சிலம்பு கருங்குழ லார்குழு**
**உள் சிலம்பு சிலம்ப ஒதுங் கலால்'**

(எழுச்சிப் படலம, 45)

(களள - வண்டு; சிலமபு - ஒலிக்கும, நூபுரம )

சிலம்பொலிக்கு வண்டொலி ஒதுங்கிப் போகிறது.

கீழ் ஸ்தாயியை 'மந்தரம்' என்று நாம் கூறுகிறோம். 'மெலிவு' என யாழ் நூலில் கூறப்பட்டுள்ளது. பெரிய புராணத்தில் 'மந்தரத்தும மத்திமத்தும் தாரத்தும்' என மூன்று தானங்களேயும் சேக்கிழார் கூறுகிருர். கம்பன் இராவணன் துயில் உணர்ந்து அசோக வனத்துக்கு வரும்போது பல கருவிகளை ஏந்திய துயில் அருத மடந்தையர் தம் மந்த நடைக்குப் பொருந்த,

'மந்தர கீதத்து இசைப பதம தொடர

(காட்சிப படலம், 86)

வருவதாகக் கூறியுள்ளார்.

## பண்

இராவணன் பண் வித்தகன. சிவ பெருமானுக்கு முனபு 'நாற்பெரும் பண்ணும் நயப்புறப் பாடி'னவன் (ஊர் தேடு படலம், 176); 'நாரத முனிவற்கு ஏற்ப நயமபட உரைத்த' நாவன் (குமபகருணப் படலம், 1). நாற்பெரும் பண்கள் பாலை, குறிஞ்சி, மருதம், முலலை, (செவ்வழி) எனபன அவற்றில் தோனறிய குறும் பண்கள் 103 என அறிகிறோம. அவற்றுள், கம்பன் குறிப்பிடும பண்கள் சில

### குறிஞ்சிப் பண்கள்

தசரதனுடைய பரிவாரங்கள் மிதிலைக்குச் செல்லும்போது விறலியரும் செயிரியரும்

'நறை செவிப் பெய்வது என்ன
நைவள அமுதப பாடல்
முறை முறை பகர்ந்து போனா.'

(எழுசசிப படலம், 60)

சீதை, மன்னர் இருந்த மணி மண்டபம் அடைந்தபோது இருந்த நிலைமையைக் கவிச் சக்கரவர்த்தி கூறும்பொழுது நைவளம் பண்ணையே சீதையாக உருவகப்படுத்துகிருர்:

'நைவளம் நவிற்று மொழி
நண்ண வரலோடும்'

(கோலங்காண படலம், 34)

என, தற்கால மேற்கததிய இசையில் நாடகப் பாததிரங்களை அவ்வற்றுக்கு உரிய பண்ணில (tune) உணர்த்தும் பாணியை ஈண்டுக் காண்கிறோம்,

நைவளப் பண் முற்பகலுக்கு உரியது; நடந்து வருவதைக் குறிப்பது. சுவைகளுள் உவகையும், மருட்கையும கலந்தது. இப் பண்புகள் அனைத்தையும இவ் இரு இடங்களில் காண்கிறோம்.

சித்திரகூட மலை வளத்தை இராமன் சீதைக்குக் காட்டுகிருன். அந்நிலப் பெண்கள் மரங்களில் ஊசலைத் தாழ விட்டுக் கனிவுடன் பாடும் பாடலைக் கேட்டு அசுணமா என்ற விலங்கு கண வளருகின்றன.

'குனிந்த ஊசலில் கொடிச்சியர்
எடுத்த இன குறிஞ்சி
கனிந்த பாடல கேட்டு அசுணமா
வளர்வன காணுய்'

(சிததிரகூடப படலம, 24)

இது இராப் பொழுதுக்கு உரிய பண்; மாலை விளையாட்டிற்கும் உரியது. அதன் ஒருவகை 'மேக ராகக் குறிஞ்சி'. இன்றைய நீலாம்பரி ராகம் இங்குக் கூறப்படுகிறது,

### மருதப் பண்கள்

சித்திரகூடத்திலேயே மருதப் பண் ஆகிய கொல்லியும் பயிலகிறது. பாடுவோா குன்றவர், கிழங்கைத் தோண்டுகின்றனர்.

'கொல்லி வாங்கிய குன்றவர்
கொடி நெடுங கவலை
கல்லி வாங்கிய குழிகளை
நிறைபபன காணுய்'

(சிததிரகூடப் படலம், 13)

(கவலை - ஒருவகைக் கிழஙகு, கல்லி - தோண்டி.)

வண்டு கந்தாரம் (காந்தாரம்) என்ற பண்ணைப் பாடுகிறது. அது மானிட, அரக்க, தேவப் பெண்களைப் போலப் பிறருக்காகப் பாடவில்லை, தன்னுடைய களிப்பு மிகுதியால் பாடுகிறது: பாடுவதால் தன் களிப்பை மேலும் மிகுவிக்கிறது.

'அறை தும்பி, கந்தாரத்தின்
இன் இசை பாடிக் களிகூரும்'
(ஊர்தேடு படலம், 78)

அசோக வனத்தை அனுமன் அழித்தபோது, அங்குக் 'காமரம்' என்ற பண்ணைப் பாடிக்கொண்டிருந்த வண்டுகள் பூக்களோடும், தேனோடும் கடலில் போய் வீழ்ந்தன.

'.............. . துகைத்தலின்
காமரம் களி வண்டொடும், கள்ளொடும்,
காமர் அக்கடல் பூக்கடல் கண்டவே'
(பொழில் இறுத்த படலம், 33)

இப் பண் மண்டோதரியின் அரண் மனையிலும் பாடப் பெறுகிறது.

'கரும்பையும் சுவை கைப்பித்த
சொல்லியர் காமரம் கனியாழின்
நரம்பின் இன் இசை செவிபுக'
(ஊர்தேடு படலம், 195)

இலங்கையில் நாம் காணும் மற்றொரு மருதப்பன் குச்சரி.

'குச்சரித் திறத்தின் ஓசை களம் கொள'
(ஊர்தேடு படலம், 187)

இதைப் பாடுவோர் இராவணனுக்கு உரிய அரக்க மகளிர். கந்தாரம் பெருமிதச் சுவையை உணர்த்தும் பண். பிற, அவலச் சுவையை உணர்த்துவன. இச் சுவைகளோடு மருட்கையும் கலந்து உலாவும். இப் பண்கள், பின் இரவுக்கும் காலைக்கும் உரியன என்பதையும் காண்கிறோம்.

முல்லைப் பண்கள்

செவ்வழிப் பண்ணை, அரச அன்னம் தாமரை மலர்ப் பள்ளியினின்று துயில் எழ வண்டு பாடும்,

'பயில் சிறை அரச அன்னம்
பல்மலர்ப் பள்ளி நின்றும்
துயில் எழ, தும்பி காலை
செவ்வழி முரல்வ'
(நாட்டுப் படலம், 14)

இப் பண் மருட்கைச் சுவை உடையது. மாலைப் பண் எனினும் காலைப் பண்ணைக் கம்பன் கூறுவது ஆராய்தற்கு உரியது.

வள்ளைப் பாட்டு (உலக்கைப் பாட்டு):

வள்ளல்கள் மனைகளில் ஒலிக்கும்; அவ ஓசை மங்கலமானது.

வள்ளியோர், மனைச் சிலம்புவ
மங்கல வள்ளையே '
(நாடடுப் படலம், 29)

## இசைக் கருவிகள்

வீணை, யாழ், குழல், குணில், குறடு, சில்லரிப் பாண்டில், சங்கு, பேரி, தண்ணுமை என்பன கம்பராமாயணத்தில் பல இடங்களில் காணப்படும இசைக் கருவிகள்.

வீணை சங்கப் பாட்டில் இலது; அது சிந்தாமணியிலும், பெருங்கதையிலும், ஆழ்வார், நாயன்மார் பாடல்களிலும் உளது. கம்பனில் பலவகை யாழ், வீணைகளைக் காண்கிறோம்.

'தேம் பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட'
(நாட்டுப் படலம், 4)

'செயிரியர் மகர யாழின்
தேம்பிழி தெய்வ கீதம்'
(காமுகப படலம், 40)

'மகர வீணையின் மந்தர கீதத்தின்'
(ஊாதேடு படலம், 27)

'விஞ்சையர் பாணி தள்ளும்,
கந்தார வீணைக் களி செஞ்செவி'
(கடல் தாவு படலம், 62)

இவற்றால், ஒருகால் கம்பன் காலத்தில் வீணையும் யாழும் வெவ்வேறு கருவிகளாகக் கருதப்படாமல், ஒரே கருவியாக இருந்ததோ என்ற ஐயம் எழலாம். ஆனால், அவ்வாறு அன்று. வீணை, மெட்டுக்களை வகுத்து, அசைக்கும் நரம்பின் நீளத்தை விரலால் அமைக்கத் தக்க கருவி. யாழ்க்கருவியிலோ, நரம்புகளின் நீளத்தைக் கூட்டவோ குறைக்கவோ இயலாது; ஒவ்வொரு நரம்பும் வெவ்வேறு இசையை எழுப்பும். ஒவ்வொரு பெரும் பண்ணுக்கும் வெவ்வேறு யாழ் வேண்டியிருந்தது; வீணை பண்களுக்குப் பொதுவானது. இவற்றை வேறுபடுத்தி, கம்பர் பெருமான் காட்டுகிறார்.

'குழலும் வீணையும் யாழும் என்று
இனையன குழைய'

(ஊர்தேடு படலம், 6)

இரு கருவிகளும் தனித்தனி ஒலித்தன; எனினும் தம்முள் இணைந்து குழைந்தன.

யாழ் அருகி, புதிதாக எழுந்த வீணை, மக்களுடைய மனத்தில் உயர்வு பெற்றிருந்தது என்பதற்கு இராவணன் வீணைக் கொடியை உயர்த்தி இருந்ததாகக் கம்பன் வால்மீகியிலிருந்து மாறுபட்டுக் கூறுவதே சான்று.

'காண் தகும் நீண்ட வீணைக் கொடி
பற்றி ஒடித்து
உயர் வானவர் ஆசி கொண்டான்'

(சடாயு வதைப் படலம், 21)

'இசை உறு கருவியின் இனிது உறை கொடி'

(இராவணன் வதைப் படலம், 86)

வால்மீகி இராவணனுடைய கொடியாகக் கூறுவது மானுடத் தலையை (VI 100-14).

கருவிகள் தம்முள் ஒன்றி இசைப்பது ஆமந்திரிகை (Orchestration) வழக்கத்தில் இருந்தது. தோலக் கருவிகள், தாளக் கருவிகள் இவற்றோடு வாய்ப்பாட்டும் இணைந்ததை ஓரிடத்தில் கம்பர் காட்டுகிறார்.

'தொலை உறு புழை வேய்த் தூங்கு
இசைக் கானம்
துயலுறாது ஒரு நிலை படர,
இளையவர் மிடறும் இந்நிலை இசைப்ப,
கிளைஞரா முறை நிறுத்து எடுத்த
கிளை உறு பாடல், சில்லரிப் பாண்டில்
துழவிய முழவொடு கெழுமி,
அளை உறும் அரவும் அமுது வாய் உகுப்ப,
அண்டமும் வையமும் அளப்ப'

(காட்சிப் படலம், 84)

(புழை - ஓட்டை, வேய் - மூங்கில், துயல் உறாது - பிறழாமல், இளையவர் - இளம் பெண்கள், மிடறு - கண்டம், ஆகுபெயரால் பெண்களுடைய குரலைக் குறிக்கும், சில் அரி பாண்டில் - சில சில, என ஒலிக்கும் தாள ஒத்து; அதனை ஒத்து முழவு - தோற்கருவி, லய வாத்தியம் ஒலிக்கிறது, அளை - புற்று).

நரம்புக் கருவிகளும் மிடறும் இணைந்து ஒலிப்பதை இராவணன் மாட்சியைக் கூறும் இவ் வருகையிலேயே அமைத்துள்ளார். இனி,

'நந்தரி நெறியில தாக்குறு கருவி
தூக்கினர் எழுவிதச் சுதியின்,
முந்துறு குணிலொடு இயைவுறு
குறட்டில்
சில்லரிப் பாண்டிலில, முறையின்
மந்தர கீதத்து இசைப்பதம் தொடர
வகை உறு கட்டளை வழாமல்
அந்தர வானத்து அரம்பையர் கரும்பின்
பாடலார், அருகு வந்து ஆட'

(காட்சிப் படலம், 86)

(குணில் - பறை அடிக்கும் குறுந்தடி, குறடு - தாளம் அடிக்கும் மரத்துண்டு)

நடக்கும்போது கையில் ஏந்திக் கொண்டு வாசிக்கும் நரம்புக் கருவியை இங்கு ஏனைய தாளக் கருவிகளோடு இணைத்துக் கூறுகிறார். திருமுறை கண்ட புராணத்துக் கூறப்படும் 'கட்டளை'யையும் இங்குக் காண்கிறோம்.

ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய பாடல்களின் கட்டளைகள் இன்ன என்பது கம்பன் கால வழக்காக இருந்திருக்க வேண்டும்.

தொடங்கி, 'நீ தூக்கிச் செல்கிருயே, அவளே யார் என்று நினைத்தாய்? உலகின் மாதா அடா அவள்! அவளுக்குத் தீமை எண்ணிஞல் உனக்கு ஆதாரம் யார்? கரனேயும் தூடணனேயும் ஆயிரக்கணக்கான அரக்கரையும் எமனுக்குச் சுடச்சுட விருந்து அளித்தவன் இராமன். உன்னேக் கொல்ல வந்திருக்கும் அவன்மீது உருண்டையை எறிவதுபோல் நடந்து கொள்கிருயே? தேவர்களே அடிமை கொண்டோம் என்று இறுமாந்து நில்லாதே. அவன் தேவர்கட்கும் மேலான பரம்பொருள். நீ பெற்ற வரம் எல்லாம் அவன் சரம் எடுக்கும் வரைதான் நிற்கும்' என்று பேசுவது அவனது அறிவுடைமையையும், நாவன்மையையும், அழிசெயல் செய்பவனுக்கும் அறிவுரை கூறித் திருத்த முயலும் அருள் உடைமையையும் காட்டும்.

அவன் சொல்லே இராவணன் மதியாது ஒழியவே அவனேடு கடும் போர் செய்தான். ஆயுதம் எதுவும் இன்றித் தன் மூக்காலும், நகத்தாலும், சிறகாலும் இராவணனேக் கொத்தியும், குடைந்தும், அடித்தும் அவனது பொற்கவசத்தையும் வில்லேயும் உடைத்தான். தேர்ப்பாகனேக் கொன்று அவன் தலேயை இராவணன் முகத்தில் வீசினுன். வீணேக்கொடியை முறித்தெறிந்தான். தெய்வ வாளால் தாக்குண்டு சடாயு மண்ணில் வீழ்ந்த போது ''அறநெறி நின்றுளோர்க்கு எல்லாம் ஆணி'', ''தோழமை நல்லியல் அருங்கடன் கழித்த நம்பி'' வீழ்ந்தானே என்று பொருமியழுதாள் சீதை. ஆம், தோழமைக் காகத் தன் அரிய உயிரைத் தியாகம் செய்தான் அப் பெரியோன். இராம-இலக்குவர் சீதையைத் தேடிவரும் வழியில் மாபெரும் போரின் அறிகுறிகளேக் கண்டு, திடுக்குற்று, மனம் பதைத்து ஓடிச்சென்றபோது, இராமன் 'தன் தனி உயிர்த்தந்தை' குருதிக்கடலில் மந்தர மலேயெனக் கிடப்பதைக் கண்டு, பாய்ந்து சென்று, அத் திருமேனியில் விழுந்து கதறிஞன்; மயக்கம் உற்ருன். இலக்குவன் மயக்கம் தெளிவிக்க, உணர்வு பெற்று, சடாயுவின் சான்ருண்மையை எண்ணி நைகின்ருன்:

''என்தாரம் பற்றுண்ண
ஏன்ருயை, சான்ருேயைக்
கொன்ருனும் நின்ருன்,
கொலேயுண்டு நீ கிடந்தாய்,
வன்தாள் சிலே ஏந்தி
வாளிக்கடல் சுமந்து
நின்றேனும் நின்றேன்
நெடுமரம்போல் நின்றேனே''

என்ற பாடல் தந்தையைச் சாகக் கொடுத்து நிற்கும் மகனின் அளவு கடந்த வருத்தம் தோய்ந்து நிற்கிறது. சடாயு சிறிது உணர்வுற்று, ''தேவர்களின் துயரத்தாலும் அறத்தாலுமே சீதையைப் பிரிய நேர்ந்தது என்றும், 'துதிஅறு பிறவியின் இன்ப துன்பந்தான் திவயம், என்பதை மேற்கொளாவிடின் மதிவலியால் விதி வெல்ல வல்லமோ?'' என்றும் ஆறுதல் கூறி, இராவணனே சீதையைக் கவர்ந்து சென்ருன் என்று தெரிவித்தவுடன் இராமன், 'உலகையே அழிப்பேன்' என்று பெருஞ்சினத்தால் பொங்கி எழுந்தான். அது கண்டு இலக்குவனே அஞ்சிஞன். சடாயுப் பெரியோன், மிகவும் சாந்தமாக,

''வம்பிழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின்போய்க்
குலப்பழி கூட்டிக்கொண்டீர்
.................................
.................................
உம்பிழை என்பதல்லால்
உலகம் செய்பிழையும் உண்டோ?''

என்று எடுத்துக் கூறிச் சினம் மாற்றி ஞன். இறக்கும் தறுவாயினும் அவனது அறிவு சுடர்விட்டது. சான்ருண்மை தலை நின்றது. அவன் உணர்வு இழந்து இறந்தபோது இராமன் செயலற்று நின்றுவிட்டான். சுமித்திரை சிங்கம், 'உந்தையை உயிர் உண்டானை உயிர் உன்னும் ஊற்றம் இல்லாச் சிந்தையை ஆகிநின்று செய்வது என் செய்கை?' என்று ஆறுதல் கூறிஞன். தயரதனுக்குச் செய்யாத இறுதிக்கடனை இராமன் சடாயுவிற்குச் செய்தான். புள்ளின் வேந்தன் பெற்ற பெரும்பேறன்ருே இது? சந்தனத்தால் சிதையடுக்கி, தன் கையால் சடாயுவைத் தூக்கி எடுத்துக் கண்ணீரும் தண்ணீரும், சந்தனமும் மாமலரும் சொரிந்து, எரி மூட்டி நிறைவு செய்தான் இராமன்.

வீரமும், அன்பும், நட்பும், ஞானமும், அருளும், சான்ருண்மையும் என்ற பெருங் குணங்கட்குக் கொள்கலமாய் விளங்கும் புள்ளின் வேந்தன் சடாயு, இராமகாதையில், இராமனின் நெஞ்சக் கோயிலில் நிறைந்து நிற்கும் அன்புத் தந்தையாய், வீடணனுக்கு அடைக்கலம் அளிக்கும் காலத்தில் இராமன்,

"சரண் எனக்கு யார்கொல்? என்று
சானகி அழுது சாம்ப
அரண் உனக்கு ஆவன், வஞ்சி
அஞ்சல் என்று அருளின் எய்தி
முரண உடைக் கொடியோன் கொல்ல
மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணம் என்தாதை பெற்றது
என்வயின் வழக்குஅன்று ஆமோ?"

எனத் தனக்கோர் முன் உதாரணமாக எடுத்துக் காட்டும சான்ருேனை விளங்குவதை எண்ணிக் கற்போர் உலகம் மகிழ்கிறது.

# வயிர மார்பன்

திரு தெ. ஞானசுந்தரம்

திருமாலின் அவதாரங்களில் இராமாவதாரத்தைப் போற்றிப்பாடும் கம்பர் பிற அவதாரங்களாகிய வாமனவதாரம், திருவிக்கிரமாவதாரம், பரசுராமாவதாரம், நரசிங்காவதாரம் ஆகியவற்றையும் தம் காப்பியத்தில் பாடிச் சென்றுள்ளார். அவற்றுள் முதல் மூன்று அவதாரங்களும் பால காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. நரசிங்காவதாரம் யுத்த காண்டத்தில் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் கம்பநாடர் நெஞ்சை அள்ளிய அவதாரம் நரசிங்காவதாரம் என்னலாம்.

இராவணனுக்கு நல்லறிவு கொளுத்த முயன்ற வீடணன், திருமாலின் பேராற்றலையும் அவனைப் பகைத்தோர் எத்துணை ஆற்றல் பெற்றவராயினும் அழிவர் என்பதனையும் விளக்கும் நிலையில் நரசிங்காவதாரம் எடுத்த திருமாலால் இரணியன அழிந்த செய்தியைக் கூறுகிறான். எனினும், கம்பநாடர் நரசிங்காவதாரத்தைப் பால காண்டததிலேயே உவமை, வாயிலாகச் சுட்டுகிறார். காலையில் கதிர் எழும் தோற்றத்தினைப் பாடும்போது, இரவாகிய இரணியனைக் கோபிததுக் கதிர்கள் என்னும் ஆயிரம் கைகளை ஓச்சி, உதயமலையாகிய தூணின் நின்றும் மானுட மடங்கல் போலக் கதிரவன் தோன்றினன் என்கிறார்.

'மீனுடை எயிற்றுக் கங்குல-
கனகனை வெகுண்டு, வெய்ய
கானுடைக் கதிர்கள் எனனும்
ஆயிரம் கரங்கள ஓச்சி,
தானுடை உதயம என்னும
தமனியத் தறியுள் நின்று,
மானுட மடங்கல என்ன,
தோன்றினன்-வயங்கு வெய்யோன்'

(பூகமொய படலம், 1.)

பின்னர், சுந்தர காண்டத்திலும் இரணியனைப்பறறி இரண்டு இடங்களில் கூறுகிறார். இராவணன் சீதையைக் காண அசோக வனத்துக்கு வருகிறான. அவன் வருகையால் திசை யானைகள் அச்சம் கொண்டன. அவை கயிலை மலை போலத் திரண்ட வலிமை பொருந்திய இரணியனுடைய சிறந்த வரங்களை வென்ற நரசிங்கத்தினது அடிச்

சுவட்டைத் தன் துதிக்கையால் அளைந்த யானை போலப் பேரச்சம் கொண்டனவாம்.

இதனை,

'..... ........... ..... ............... ..

மாதிரம் காவல் மால் யானை
கயிலையின் திரண்ட
முரண் தொடர் தடந்தோள்
கனகனது உயர் வரம் கடந்த
அயில் எயிற்று அரியின்
சுவடுதன் கரத்தால்
அளைந்த மாக கரியின் நின்று அஞ்ச'

எனக் குறிக்கின்றார்.

இராவணனை நோக்கி வெகுண்டு பேசும் சீதையும் இரணியனைக் குறிப்பிடுகின்றாள். முற்காலத்தில் அறம் திறம்பிய இரணியாக்கன், இரணியன் முதலியோரும் பிறன் மனைவியரை நயந்து தவறு செய்திலர் என்பது சீதையின் கூற்று.

பொற்கணன், தம்பி, என்று
இனைய போர்த்தொழில்
வில்கொள் நாண் பொருத தோள்
அவுணர், வேறு உளார்,
நற்கண் ஆர் நல் அறம்
துறந்த நாளினும்,
இற்கணார் இறந்திலர்;
இறந்து நீங்கினார்.

(சுந்தர காண்டம்; காட்சி, 125)

இவ்வாறு, கம்பர் இரணியன் வரலாற்றைக் காப்பியத்தில் இடை இடையே குறித்துச் செல்வதும், வான்மீகத்தில் இல்லாத இதனைத் தக்க இடத்தில் அமைத்து இனிது பாடிச் செல்வதும் நரசிங்காவதாரத்தின்கண் அவர் கொண்ட ஈடுபாட்டினைப் புலப்படுத்துகின்றது. ஆங்கிலக் கவிஞன் மில்டன் காப்பியம எழுதுதற்குரிய கதையினைத் தேர்ந்தெடுப்பதனபொருட்டு ஆர்தூர் மன்னனைப்பற்றிய புனைகதைகளை நெடுங் காலம் படித்துப் பின்னர்த் துறக்க நீக்கத்தைப் பாடத் துணிந்தான் என்பர். கம்பரும் திருமாலின் அவதாரங்களில் எதனைப் பாடலாம் என்னும் ஆராய்ச்சியில் ஈடுபட்டு இறுதியில் இராமாவதாரத்தைப் பாட முற்பட்டிருக்கலாம் என்றும், எனினும அவரது உள்ளத்தை நரசிங்காவதாரமும் கொள்ளை கொண்டதனால் அதனையும் ஒரு குறுங்காப்பியமாக அமைத்துள்ளார் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

'நான்' என்னும எண்ணம் இல்லாதவனே உலகில் இல்லை. அமெரிக்காவில் தொலைபேசியில் அதிகமாகப் பேசப்படும் சொல் யாது எனக் கண்டறிய நடத்திய கணக்கெடுப்பில் 'நான்' என்னும் சொல்லே அதிகமாகப் பயன்படுத்தப்படுவதாகத் தெரியவந்தது. 'நான்' என்னும் இம்முனைப்பு மேலோங்கும்போது அறக்கொடியவன் தோன்றுகிறான்; இந்த 'நான்' என்னும் குறுகிய வட்டம் நாம் என விரிவடையும்போது ஒப்புரவாளன் பிறக்கின்றான்; இந்த ஆணவம் அழிந்து 'இறைவனுக்கு அடிமை' என்னும் ஞானம் தலையெடுக்கும்போது பக்தன் உருவாகின்றான். இவற்றுள் 'நான்' என்னும் எண்ணம் முறுகி எழுந்த நிலையில் இரணியன் வீழ்ச்சி அடைவதையும், அந்த முனைப்பு அற்று, 'நான் எனக்குரியவன் அல்லன்; நாராயணனுக்கே உரியவன்' என்னும் தெளிவு பெற்ற நிலையில் பிரகலாதன் வாழ்ச்சி பெறுவதையும் இரணியவதைப்படலம் நமக்குத் தெளிவாக்குகின்றது.

இரணியன் ஆணவத்தின் திரண்ட உருவாகக் காட்சியளித்தான். அவன் மண்ணிடைக் கால்களை வைத்தால், பூமி பொறையாற்றாது சோர்வுறும்; ஆயிரம் தலை ஆதிசேடன் உலகைத் தாங்க ஆற்றாது தளர்வான். எழுந்து நிற்பானாயின், அவன் தலை அண்ட

கோளத்தின் மேல் முகட்டினைத் தொட்டு நிற்கும். பெயர்ந்து சென்றால், இயக்கத்தின் வேகத்தால் ஐம்பெரும் பூதங்களும் ஈர்க்கப்பட்டு அவனோடு தொடர்ந்து செல்லும். அவன் இறங்கி நின்றால ஏழு கடல்களும் அவன் காலளவில் அடங்கிவிடும். உதயமலையும் அத்த மலையுமாகிய இரண்டும் அவன் காது குண்டலங்களாயின. இஃது அவன் பேருருவம். அவன் பேராற்றலுக்கோ வரம்பில்லை. ஐம்பெரும் பூதங்களின வலியை எல்லாம் தான ஒருவனே பெற்றிருந்தான. எல்லா அண்டங்களும் தன் பெயரே சொல்ல வாழ்ந்தான். சந்திர சூரியர்களின் ஆட்சியினையும எண்திசைக் காவலர்களின் காவற்றொழிலினையும் தான் ஒருவனே நடத்தினன். நான்முகன் அவன கொற்றச் சிறப்பினையே எடுதது ஓதினன்; வேத புருடனும் 'இரணியனே நம!' என அவன் பெயரையே முதற்கண் சொல்லித் துதித்தான். வேதங்கள் கருதிய பொருள்களை எல்லாம் பிரமனே ஆசிரியனாக இருந்து கற்பிக்க அறிந்தான்; பல்வேறு வரங்களையும் அவன்பால் பெற்று மகிழ்ந்தான். இத்தகைய பேராற்றலும் அறிவும் அவன் ஆணவத்திற்குக் காரணங்களாக அமைந்தன. எனினும், அவன் எல்லையற்ற ஆணவத்திற்கு வேறு காரணங்களும் உண்டு.

ஆணவத்தின் வேகத்தினைத் தளாவடையச் செய்யும் ஆற்றல்களுள் ஒன்று காமம். இராவணனும் பத்துத் தலைகளும் இருபது திண்தோள்களும் கூடிய பேருருவத்தோடுதான் திகழ்ந்தான்; முக்கோடி வாழ்நாளும முயன்றுடைய பெருந்தவமும், எவராலும் வெல்ல முடியாத வர பலமும் புயவலியும் பெற்றிருந்தான்.

"..................வென்றி மாதர்,
வலிய நெடும் புலவியினும் வணங்காத
மகுடநிரை"—

யோடு அவைக்கண் வீற்றிருந்த சிறப்பினைக் கம்பர் அழகுற எடுத்துக் கூறுகினறார். ஆனாலும, சீதைபால் அவன் கொண்ட எல்லையற்ற காமம் அவன் நிலையை மறக்கச் செய்தது. ஊடற்காலத்திலும் மகளிரை வணங்காத அவனுடைய தலைகள் சீதையின் முன்னே பணிகின்றன. அவள் முன்னே ஆசையால் உயிர் ஆசு அழிகினறான்; ஆசைப்பாடும் நாணும் வருத்தக் கூசிக் கூசிப் பேசுகின்றான். 'வாழ்ந்தேன்-ஒருத்தி முலைக்கிடந்த ஏக்கறவால்'— என்று அவனே தன் குறைபாட்டினை எண்ணிப் புலம்பவும் செய்கின்றான். இத்தகைய நிலை இரணியனிடம் இல்லை. அவன் பெண்ணாசையை வெனறு வீறார்ந்து நிற்கிறான். இந்த அடிப்படைக் காமம் நீங்கப் பெற்றதாலதான் அவன் எலலையில்லா அன்பு செலுத்திய பிள்ளையையும பரிவின்றித் தானே கொல்லத் துணியும் கலங்கா உறுதியைப் பெறுகிறான்.

பிரகலாதனை நோக்கி,

"கேள், இது; நீயும் காண,
கிளர்ந்த கோள் அரியின் கேழ்இல்
தோளொடு தாளும் நீக்கி,
நின்னையும் துணித்து, பின் என்
வாளினைத் தொழுவது அல்லால்,
வணங்குதல் மகளிர் ஊடல்
நாளினும் உளதோ? "

என்று அவன செய்யும் முழக்கத்தில் ஆணவத்தின் கொதிப்பினைத் தணிக்கும் காமத்தினைக் கடந்த எக்களிப்பு மேலோங்கி நிற்கிறது.

பேராற்றல் பெற்றவர்களையும்கூடக் கலங்கச் செய்யும் திறம் வாய்ந்தது கூற்றுவனைப்பற்றிய எண்ணம். இயமனைப்பற்றிய எண்ணம் தலைதூக்கும் போது ஆணவம் அற்றொழியக் குலை நடுக்கம் ஏற்படுவது இயல்பு. இந்த அச்சம் அருளாளர்களுக்கும் எழுந்துள்ளது. 'யானேதும் பிறப்பு அஞ்சேன்; இறப்பதனுக்கு என்கடவேன்?'

என்கிறார் மணிவாசகர். இந்த அச்சம் அசுரர்களுக்கும எழுந்துள்ளது. அருளாளர்கள் இந்த அச்சத்தை இறைவன திருவடிகளைப் பற்றிக் கொண்டு அமைதியும் துணிவும் கொள்கின்றனர்.

"கனைத்தெ ழும்பக டதுபிடா மிசைவரு
கறுதத வெஞ்சின மறலிதன் உழையினா
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே
கலக்கு றுஞ்செயல ஒழிவற அழிவுறு
கருதது நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தில் என்பயம அறமயில முதுகினில வருவாயே"

என அருணகிரிநாதர் முருகப்பெருமானை வேண்டும்பொழுது இவ்வுண்மை நன்கு புலனாகின்றது. ஆனால், அசுரர்களோ வரபலததால் இயமனை வெல்ல முயல்கிறார்களே தவிர, இறைவன் திருவடியைத் தஞ்சமாகப் பற்றுவதற்கு எண்ணம் கொள்வதில்லை. இதே போக்கிலதான இரணியனும இறப்பினைப்பற்றி அசசம கொண்டான். ஆனால, அதனை வர பலததால் வென்று விடலாம் என்று தப்புக் கணக்குப் போட்டு, வரங்களை ஈட்டினான்.

இரணியன் விரிஞ்சன்பால் பெற்ற போதம கணணிய வரங்களை எல்லாம இறப்பைக் கடப்பதற்காகப் பெற்றனவாகவே உள்ளன. இயற்கையின் கூறுகளாகிய விண் மண் அனல் புனல் காற்று ஆகியவற்றாலோ, தேவர் மனிதர் முதலியோர் இழைக்கும் செயற்கை நிகழ்ச்சிகளாலோ ஒருவனுககு இறப்பு உண்டாகலாம். மேலும, அஃது இரவு பகல் என்னும் இரு வேளைகளுள் ஒனறில்தான் நிகழ்தல வேணடும். அடுத்துக் கொலை, படைக்கலம் போன்ற கருவிகளில் ஒன்றினால்தான் விளையும். இப்படிச் சாவிற்குக் காரணமாகிய இயற்கைக் கூறுகள், செயற்கை நிகழச்சிகள், காலம், கருவி ஆகியவற்றினின்றும் தன்னைக் காத்துக் கொள்ளுதற்குரிய வரங்களை எல்லாம் ஒன்று விடாமல் பெறுகிறான். இரணியன், உயிரைக் கவர்ந்து, செல்லும நமனும் தன்னை அழிக்காத வகையில் தனியே அவனைக் குறித்தும் ஒரு வரம் பெற்றான்

'பெண்ணின், பேர் எழில் ஆணினின்,
அலியினின், பிறிதின்
உள் நிற்கும் உயிர் உளளதின்,
இல்லதின், உலவான;
கண்ணின் காண்பன, கருதுவ,
யாவினும் கழியான;
மண்ணின சாகிலன்; வானினும்
சாகிலன்; வரத்தால.'

'தேவர் ஆயினா ஏவரும,
திரிதரும் இயக்கர்
யாவா ஆயினும், எண்ணவும
துதிக்கவும் இயன்ற
கோவை, மால், அயன, மான்இடன்,
யாவரும் கொலல,
ஆவி தீரகிலன; ஆறறலும
தீர்கிலன்—அனையான்.'

'நீரின சாகிலன்; நெருப்பினும்
சாகிலன்; நிமிர்ந்த
மாருதத்தினும், மண்ணின்மற்று
எவற்றினும் மாளான்.
ஒரும் தேவரும் முனிவரும்
பிறர்களும் உரைப்பச்
சாரும் சாபமும், அன்னவன்
தனனைச் சென்று சாரா.'

இம் மூன்று பாக்களிலும இயற்கையாலும் மனிதர் தொடக்கமான உயிரினங்களாலும் அழிவு நேரா வண்ணம் வரம் பெற்றமை புலனாகின்றது.

'உள்ளில் சாகிலன்; புறத்தினும்
உலக்கிலன்; உலவாக்
கொள்ளைத் தெய்வ வான் படைக்கலம்
யாவையும் கொல்லா;
நள்ளில் சாகிலன்; பகலிடைச்
சாகிலன்; நமனுர்
கொள்ளச் சாகிலன்; ஆர்இனி
அவன் உயிர் கொள்வார்?'

'பூதம் ஐந்தொடும் பொருந்திய
உணர்வினில் புணரா
வேதம் நான்கினும் விளம்பிய
பொருள்களால் விளியான்;
தாதை தன்னைத்தான் தனிக் கொலை
சூழினும் சாகான்;
ஈது அவன் நிலை; எவ்வுல-
கங்கட்கும் இறைவன்.'

என்னும் பாக்கள் இடம், காலம், கருவி ஆகியவற்றுல் நேரக்கூடிய அழிவினின்றும் தன்னைக் காத்துக் கொள்ள அவன் வரங்கள் பெற்றதனைத் தெரிவிக்கின்றன. தந்தையாகிய தானே தன மைந்தனைக் கொல்லத் துணியும் இரணியன தன் தந்தையாலும் தனக்கு இறப்பு நேரா வகையில் வரம் பெற்றதனை நோக்கின், அவன் எவ்வளவு கவனத்தோடு வரங்கள் பெற்றிருந்தான் என்பது விளங்குகின்றது. இப்படிப் பல்வேறு வரங்களைப் பெற்ற இரணியன் தனக்கு இறப்பே இல்லை என்று எண்ணினுன். அந்த நினைவு நெய்யே அவன் அகத்தில் கனன்ற ஆணவ நெருப்பினைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தது. அந்தக் கொழுந் தீ அவன் நெஞ்சத்தினின்றும் பாசம், பரிவு ஆகிய மென்மையான உணர்ச்சிகளை முற்றிலும் அற்றொழியச் செய்தது. அவன் காமமோ வேறு உணர்ச்சிகளோ கலக்காத வெறும் அகங்காரத்தின் ((Unalloyed Ego) பேருருவாக மாறிவிட்டான். காண்கின்ற பொருளிலும் இடத்திலும், கேட்கின்ற ஒலியிலும் தன் பெயரே நிறைந்திருக்க வேண்டுமென்று எண்ணினுன்.

இந்தத் தழும்பேறிய அகங்காரத்துக்கு அவன் முற்றிலும் எதிர்பாராத வகையில் அவன் அருமை மைந்தனிடமிருந்தே எதிர்ப்பு நேர்ந்தபொழுது அவனுல் தாங்க முடியவில்லை. அது முன்னிலும் விஸ்வரூபம் எடுக்கின்றது. பிரகலாதன் நிகழ்த்திய ஞான உரை, பாலை நிலத்தில் உகுத்த சாலி விதைகளாகின்றது. இரணியன் தனக்கு மேலே ஒருவன் இல்லை என்றே மனமார நம்புகிறுன். தன் பெயரே எங்கும் நிறைந்திருக்க வேண்டும் என்னும் முனைப்போடு செயற்படுவோனுல் எல்லாப் பொருள்களிலும் ஒருவன் நீக்கமற நிறைந்துள்ளான் என்பதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. பிரகலாதன் அப்படி நிறைந்திருக்கும் நாராயணனைப்பற்றிக் கூறியபொழுது, இரணியன் அவனை நோக்கி,

"நன்று, அதுகண்டு பின்னர்
நல்லவா புரிதும்; தூணின்
நின்றுளன் என்னின், கள்வன்
நிரம்புதி நிலைமை"

என்கிறுன். பெருஞ் சீற்றத்தோடு நிற்கும் அந்நிலையிலும் பிரகலாதனுல் எங்கும் நிறைந்திருக்கும் ஒருவனைக் காட்ட முடியாது என்ற எண்ணத்திலேயே, "எங்கே காட்டு, பார்க்கலாம்" என்றுன். "அப்படி, நீ காட்டாவிட்டால் வலிய சிங்கம் யானையினைக் கொல்வதைப்போல உன்னைக் கொன்று தின்பேன்" என்றுன். அந்த எண்ணத்தோடுதான் உயர்ந்த தன் கையால் தூணை எற்றினுன். ஆனுல், அவன் நினைத்ததற்கு மாருக அத்தூணின் உள்ளிருந்து செங்கண் சீயம் ஒன்று அண்டம் கீறச் சிரித்தபொழுது அவன் வியப்படைந்தான். எனினும், அவன் ஆணவம் எதிரி

யைக் குறைவாக எடை போடச் செய்தது. எவராலும் தன்னைக் கொல்ல முடியாது என்ற எண்ணத்தில் அச் சிங்கத்தினை ஒரு பொருட்டாக மதிக் காமல்,

"ஆர் அடா சிரித்தாய்? சொன்ன
அரிகொலோ? அஞ்சிப் புக்க
நீர் அடா போதாது என்று
நெடுந்தறி நேடினுயோ?
போர் அடா பொருதி ஆயின்
புறப்படு! புறப்படு!"

என்றான். அவன் பேச்சில் வரும் அடா என்னும் சொல் அவன் ஆணவத்தைப் புலப்படுத்தும் முத்திரையாக விளங்கு கின்றது.

நரசிங்கம் வெளிப்படுகிறது. பிரக லாதன் அதனை வணங்கி உய்வுபெறு மாறு தன் தந்தையை வேண்டுகிறான். ஆனால், இரணியன் ஆணவமோ தணிந்து திருந்தும் எல்லையைக் கடந்து மேருவின் உயரத்தினும் மேம்பட்டு நிற்கிறது. "நானா? இதனை வணங்கு வதா? உன் எதிரிலேயே இதனை அழித்து உன்னையும் கொன்று பின் என் வாளினைத் தொழுவேனே அல் லாமல் இதனை வணங்குதல் செய் யேன்" என்று ஆத்திரத்தோடு சிரிக் கிறான். சிங்கப்பிரானோடு போரிடச் செல்கிறான். திருமால் அவனை அவன் பெற்ற வரங்களுக்கு முரண்படா வகையில் நரசிங்க வடிவுங்கொண்டு, அந்திப் பொழுதில் அரண்மனை வாயிற்படியில் கொன்று அழிக்கிறான்.

'ஆய்வின் தன்னை மாயன்
அந்தியின் அவன் பொன் கோயில்
வாயிலில் மணிக்கவான் மேல்,
வயிர வாள் உகிரின், வானின்
மீஏழு குருதி பொங்க,
வெயில் விரி வயிர மார்பு
நீளுழப் பிளந்து நீக்கி,
தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்.'

பிரகலாதனிடம் இரணியன், "நீ இறைவனைத் தூணிடைக் காட்டா யாகில் சிங்கம் யானையைக் கொல் வதைப் போல உன்னைக் கொன்று தின்பேன்" என்றான். அதனால்தான், திருமால் வேறு வடிவம் எடுக்காமல் அவன் சொன்ன அதே சிங்க உரு வினைத் தான் மேற்கொண்டு அந்த இரணியனாகிய யானையைக் கொன் றான். ஆணவ வேர் ஊன்றி ஓங்கி நின்ற இரணிய நச்சு மரம் நரசிங் கப் பெருங்காற்றின் வீச்சில் அடி யோடு சாய்ந்து வீழ்ந்தது.

இவ்வாறு திருமாலை இறுதிவரை எதிர்த்து நின்றதற்குத் திருமால் இரணியன் அண்ணனாகிய இரணி யாக்கனைக் கொன்றதனால் விளைந்த பகையே காரணம் என்று கொள் வதற்கும் இல்லை. அது பகைக்குக் காரணமாக வேண்டுமானால் அமைய லாமே ஒழிய இத்தகைய ஆணவ நிலைக்குக் காரணமாகாது. எனவே, காமத்தைக் கடந்து நின்ற தன்மை யும், கூற்றுவனை வென்றுவிட்டோம் என்ற எண்ணமுமே அடல் இரணி யனின் தலை தாழா ஆணவத்திற்குக் காரணங்களாகத் தோன்றுகின்றன.

இந்நிலையில் ஒரு கேள்வி எழுகிறது. கம்பநாடர் ஏன் இந்த வரலாற்றைக் காப்பியமாகப் பாடாமல் குறுங் காப்பியமாக (Epic fragment) அமைத்துள்ளார் என்பதே அது. இராமபிரான்மீது கொண்ட ஈடு பாட்டோடு, இதனைக் காப்பியமாகப் பாடினால் இடையில் தோன்றும் சிங்கப்பிரானைக் காட்டிலும் இரணி யன் காப்பியத்தின் தன்னிகரற்ற தலைவனாகக் காட்சியளித்து முதன்மை பெற்று, அக் காப்பியம் இரணியன் கதைபோல அமைந்துவிடும் என்ற எண்ணமும் கம்பநாடருக்குத் தோன்றியிருக்கலாம் எனக் கருத வேண்டியுள்ளது.

# சுந்தர காண்டத்தில் நயங்கள் சில

டாக்டர் ரா. சீனிவாசன்

சொல்நயமும, பொருள் நயமும் கம்பன் கவிதையின் உயிர் நாடிகள். கம்பன் கவிதை கற்ருேர்க்கு இதயம் களிப்பது இந் நயத்தால்தான் என்று கூறலாம். அவற்றுள் ஒருசில இவை :-

**நன் மருந்து**

'மென் மருங்குல் போல் வேறு உள அங்கமும் மெலிந்தாள்' என்று கூறிய கவிஞர், 'நன் மருந்து போல் நலன அற உணங்கிய நங்கை' என்று கூறுவது சிந்திக்கத் தக்கதாகும் நல்ல சஞ்சீவிச் செடி போல வாடிக் கிடக்கின்ருள் என்று கூறப்படுகிறது. கல்லிடை கிடக்கினற செடி அது; மழைத் துளியே காணுமல் வாடிக் கிடக்கிறது. அதைப் போன்று வன் மருங்குல் வாள் அரங்கியர் நெருக்க அங்கு இருந்தாள் என்று கூறப்புடுகிறது. அவளைச் சஞ்சீவிச் செடிக்கு ஏன் உவமைப் படுத்திஞர். அவள் இல்லாமல் இராமன் வாழ முடியாது என்ற பொருளே உணர்த்தவே என்பது குறிப்புப் பொருளாகும்..

**மென் மருங்குலாள்**

மகளிர்க்கு இடை மென்மையானது எனறு கூறுவார்கள். இப்பொழுது அவள், வேறு உள்ள அங்கமெல்லாம் மெலிந்தாள் எனறு கூறுவது நயம மிக்கதாகும். கவிஞர்கள் இடை மெலிவு பெண்களுக்கு அழகு தரும் என்பார்கள். இப்பொழுது அவள் பேரழகியாகி விட்டாள் என்று அய்கதம் தோன்ற கூறுவது நயம் மிக்கதாகும். அவள் மென் மருங்கு லாள் என்பதை வற்புறுதத 'வன் மருங்குல் அரக்கியர் சுற்றியிருப் பதைக் காட்டுவதும் அழகிய சொல் லோவியமாகும்.

"வன்மருங்குல் வாள் அரக்கியர்
நெருக்க அங்கு இருந்தாள்
கன்மருங்கெழுந்து என்றும் ஓர்
துளிஉரக் காணு
நன்மருந்து போல நலனற
உணங்கிய நங்கை
மென் மருங்குல் போல் வேறு உள
அங்கமும் மெலிந்தாள்."

### நீ தோழன்

இராமன் குகனிடம் தன் தம்பியை அறிமுகப்படுத்தினன். தன் தம்பியைக் குகனின் தம்பி என்று கூறினன். மறுபடியும் தன் மனைவியைக் கொழுந்தி எனக் குறிப்பிடுகிறன். ஏழை ஒருவனைத் தன் தோழனகக் கொள்வதில்தான் அவன் தனிச் சிறப்பு உள்ளது. இதையும் உள்ளடக்கி 'நீ தோழன்' என்று கூறியது பாராட்டத்தக்கதாகும்.

**"ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய**
**ஏழை வேடனுக்கு எம்பிறின் தம்பி நீ**
**தோழன் மங்கை கொழுந்தி எனச் சொன்ன**
**வாழி நண்பினை உன்னி மயங்குவாள்."**

### கற்பும் காவலும்

சீதையின் தூய நிலை கண்டு அனுமன் பாராட்டுகிறன். மாசு படிந்த மணியைப் போலவும் சூரிய கிரணத்தால் ஒளி உண்ணப்பட்டு ஒளிமங்கிய திங்கள் போலத் தேய்ந்து உள்ள நிலையையும் காண்கிறன். அவள் காசுண்ட கூந்தலாள் என்பதையும் அறிகிறன். அவள் தோற்றம் ஆணின் ஏற்றத்தை உணர்த்துகிறது. அவள் கற்பும் காவலும் ஏசுண்ணவில்லை என்று கூறுகிறன். 'கற்பும் காவலும்' என்று கூறக் காரணம் என்ன? கற்பு என்பது பிறர் அழிக்கக்கூடியது; காவல் என்பது தன் மனக்காவல். இந்த இரண்டையும் உணர்த்த அழகிய சொற்றொடரைக் கையாண்டு இருக்கின்றர் எனத் தெரிகிறது.

**'மாசுண்ட மணியனுள் வாங்கு வெங்கதிர்த்**
**தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்**
**காசுண்ட கூந்தலாள் கற்பும் காவலும்**
**ஏசுண்ட தில்லையால் அறத்துக்கு**
**ஈறுஉண்டோ.'**

### இராவணனுக்குத் தந்த பதில்

ஈசற்கு ஆயினும் தன் பெருமையை விட்டுக் கொடுக்காத மனத்திண்மை உடைய இராவணன் ஆசையும் நாணும் தன்னைத் தாக்கக் கூசிக் கூசி இவ்வாறு கூறுகிறன்:

**'இன்று இறந்தன; நாளை இறந்தன;**
**என்தி றம்தரும் தன்மை இதால் எனைக்**
**கொன்று இறந்திடில் கூடுதிபோ ருழை**
**சென்று இறங்கி மறந்தரு செங்கணுய்'**

என்று கேட்கிறன். நாள்கள் ஓடிக் கொண்டே இருக்கின்றன. நான் செத்த பிறகுதான் என்னைக் கூடுவாயோ என்று மனம் நொந்து கேட்கிறன் இராவணன்.

இராவணன் உரைத்த மாற்றங்களுக்கும் உளச்சலுக்கும் எல்லாம் பதில் தந்த சீதை, இதற்குப் பதில் சொல்லவில்லை; ஏன்? இது அவள் தர வேண்டிய பதில் இல்லை. அவன் எப்படிப் போனல் அவளுக்கு என்ன? தன்னைப் பற்றியும் தன் தலைவனைப் பற்றியும்தான் தனக்குப் பேசுவதற்கு உரிமை இருக்கிறது. அவனுக்கு அறம் இந்த வகையில் எடுத்துச் சொல்ல வேண்டிய கடப்பாடு அவளுக்கு இல்லை. இதை நன்கு உணர்ந்த கம்பர், அனுமன் வாயால் பிறகு பதில் சொல்லுவது பாத்திரப் படைப்பை அவர் பழுது படாமல் காக்கும் திறனைக் காட்டுகிறது. அனுமன் அளிக்கும் மாற்றம் இது.

**" இன்று வீந்தது நாளைச் சிறிது இறை**
**நின்று வீந்ததால் இறை நிற்குமோ**
**ஒன்று வீந்தது நல்லுணர்வு உம்பரை**
**வென்று வீக்கிய வீக்கம் விதியினல்"**

தேவர்களை வென்ற உன் வெற்றிச் சிறப்பு எல்லாம் விதியால் விழுந்து விட்டது என்று பதில் கூறுகிறன்.

### ஏழை யார் யார்?

தேவரும் தேவியரும் சேவகம் செய்கின்றனர். மூன்று உலகுக்குத் தனி நாயகம் உனக்கு வரக்

காத்திருக்கிறது. பேரரசியாய் விளங்க வேண்டிய நீ இச் சுகபோக வாழ்க்கையை விலக்கிவிட்டாய். உன்னை விட ஏழை பின் யாரும் இருக்க முடியாது என்கிறான்.

''எவர் ஏழையின் நின்னின் இலங்கிழாய்?'' என்று கேட்கிறான். ஏழைமை என்பது செல்வம் இன்மை என்றுதான் உலகம் கருதுகிறது. கம்பர் அதற்குத் தரும் பதில் என்ன? சீதையின் கூற்றால் எது ஏழைமை என்பதை நன்கு விளக்குகிறார்.

அறிவின்மையும், வீரமற்ற தன்மையும், அறம் தவறுவதும்தான் ஏழ்மையாகும் என்று விளக்கம் தரக் காண்கிறோம்.

நீ என்னை ஒளித்து வைத்திருக்கும் இடம் அவனுக்குத் தெரிந்திருந்தால் இந்த உலகமே அழிந்துபோயிருக்கும்; நீயும் உயிருடன் இருந்திருக்கமாட்டாய். இதைக்கூட நீ தெரிந்து கொள்ளாமல் இருக்கின்றாய். அதனால் நீ அறிவற்றவன் என்று கூறுகிறாள்.

" ஏழை நீ ஒளித்துறை இன்னிடத் தென
வாழியென் கோமகன் அறிய அந்தநாள்
ஆழியும் இலங்கையும் அழியத்தாழுமோ
ஊழியும் திரியும்நின் உயிரோடு ஓயுமோ"

''வீரம் மிக்கவன் இராமன். அதை உணராத அறிவிலி நீ, கோழை நீ. அதனால் நீதான் ஏழை'' என்று குறிப்பால் அவனிடம் எடுத்துக் கூறுகிறாள்.

" செங்கண்மால் நான்முகன் சிவன்
என்றே கொலோ
எங்கள் நாயகனையும் நினைத்தது
ஏழை நீ "

என்பதால் அவன் அறிவின்மையையும் அவனால் இராமனை எதிர்க்க முடியாது என்ற இழிநிலையையும் உணர்த்தினாள். இராமனை நோக்க அவன் வீரத்தில் தாழ்ந்தவன் என்ற குறிப்பில் 'ஏழை' என்று குறிப்பிட்டாள்.

தருமத்தைக் கைவிடுபவரே மதிக்கத் தகாதவர் ஆகின்றனர்.—அவர்களே ஏழைகள் என்ற கருத்தையும் அவள் கூறுகின்றாள்.

" ஒப்பரும் திருவும் நீங்கி உறவொடும்
உலக்க உன்னித்
தப்புதி அறந்தை யேழாய்
தருமத்தைக் காமி யாயோ "

தருமத்தைக் காவாத நீயே ஏழை என்று கூறுகிறாள்.—அவன் ஒருமுறை ஏழை என்றழைக்க அவனை மும்முறை ஏழை என்று அறிவித்துவிட்டாள்.

**நீசன்**

இராமனின் வீரத்தையும் ஆற்றலையும் எடுத்துரைத்து, மனிதர் தாழ்ந்தவர் அல்லர் என்பதையும் இராமன் மகா வீரன் என்பதையும் சீதை இராவணனுக்கு உணர்த்தினாள். முடிவாக அவனைப் பற்றி அவள் கொண்ட கருத்தும் ''நீதி நெறி அறிந்திலாத நீசன்'' என்பதாகும். ''நீ அறிந்திலையோ நீதி நெறி அறிந்திலாத நீசா'' என்று கேட்கிறாள்.

''நீதி நெறி அறிந்திலாத நீசனே'' என்ற ஒரு பொருளும் ''நீதி நெறி அறிந்திலாத நீ சாவாயாக'' என்ற பொருளும் அத் தொடரில் அமைந்திருத்தல் காண்க. அவன் நீசன் என்பதைக் கேட்ட அனுமன் அதை மறவாமல் பின் இராவணனை ''நீசன்'' என்று குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கதாகும். இராவணனை இதைவிட வேறு விதமாகப் படம் பிடித்துக் காட்ட முடியாது என்பது கம்பன் கணிப்பாக உள்ளது எனத் தெரிகிறது. ''நாயகன் தேவியை என் முன் சொன்ன நீசன் கை தொடுவதன் முன்'' என்று அனுமன் குறிப்பிடுகிறான்.

**என் பெரும் தெய்வம் ஐயா**

இராமனிடம் அனுமன் சீதையைக் கண்ட செய்தி சுந்தர காண்டத்தின் உச்சநிலை என்று கூறலாம். கண்ணகியைப் பொற்புடைத் தெய்வம் ஆக்கி அவளை வழிபடத் தக்கவள் என்று காட்டுவதில் சிலப்பதிகாரம் வெற்றி பெறுகிறது. சுந்தர காண்டமும் சீதையை வழிபடத்தக்க தெய்வம் என்று காட்டுவதில் வெற்றி அடைகிறது.

இராமனின் மனைவி என்பது உரிமையால் பெற்ற உறவு; தசரதன் மருகி என்பது வாய்மையால் ஏற்பட்ட உறவு; சனகன் மகள் என்பது இயல்பால் ஏற்பட்ட உறவு. இவற்றைத் தக்க சொற்களால் காட்டுவது கம்பனின் சொற்செல்வத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

"உன் பெருந்தேவி என்னும்
உரிமைக்கும் உன்னைப் பெற்ற
மன் பெரு மருகி என்னும்
வாய்மைக்கும் மிதிலை வேந்தன்
தன்பெருந் தனயை என்னும்
தன்மைக்கும் தகைமை சான்ற
என்பெருந் தெய்வம் ஐயா
இன்னமும் கேட்டி என்பான்."

உரிமைக்கும் வாய்மைக்கும் தன்மைக்கும் எனத் தக்க சொற்களை எடுத்தாண்டது நயம மிக்கதாகும்.

# "எல்லாம் உடையார்"

திரு. பழ. பழநியப்பன்

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்று பேசுவான் வள்ளுவன்.

"எல்லாம் உடையார் என்றால் எவை எல்லாம் உடையார்?"

"எல்லாவற்றையும் உடையார்."

"எல்லாம் என்றால் என்ன?"

"எல்லாம் என்றால் எலலாம்தான்"

இப்படித்தான் என்னைப் போன்றவர்களால் பதில் சொல்ல முடியும். இதோ கையில் கட்டியுள்ள இந்தக் கெடியாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். என்னால் இதை அக்குவேறு ஆணி வேறாகக் கழட்டிப் பிரித்து வைக்க முடியும். ஆனால், அந்த சாமான்களையே கொண்டு மீண்டும் அதைக் கெடியாரமாக்கி ஓடவைக்க என்னால் முடியாது; தெரியாது. அப்படிச் செய்யவேண்டுமானால் எனக்கு அந்தத் துறையில் அறிவு வேண்டும். அறிவுடைய ஒருவன் பத்தே நிமிடங்களில் மறுபடியும் ஒரு கெடியாரத்தை ஓட வைக்க முடியும். ஆனால், அந்த அறிவில்லாத என்னைப் பொறுத்தவரை அவை வெறும் தகரத் துண்டுகள்தான். என்னைப் பொறுத்தவரை அவற்றின் மதிப்பு காயலான் கடை மதிப்புத்தான். அதே பொருள்கள் ஒரு கெடியாரத் தொழிற்சாலையிலிருந்து சேர்க்கப்பட்டு வந்தால் அதன் மதிப்பு நூற்றுக் கணக்காக மாறும். ஆகவே, அறிவுடையவர்களுக்கு எல்லாமே மதிப்புடையவை. எல்லாம் அவர்கள் உடைமையாகும்.

இந்த அறிவையும் பலதுறையிலும் கூர்மையாக வைத்துக் கொள்ளுகிறவர்கள் உண்டு. ஒரு வக்கீல் கவிஞராகவும் இருக்கலாம். ஒரு மருத்துவர் சிறந்த எழுத்தாளராகவும் இருக்கலாம். சாதாரணமாக மனிதர்கள் ஒரு துறையிலே மேதைகளாக இருக்கலாம். ஆனால், தொட்ட தொட்ட துறையெல்லாம் மேதாவிலாசம் உடையவராக ஒருவர் இருக்க முடியுமா? அப்படியும் ஒருவரைச் சுட்ட நினைத்தால் முதலில் முன் நிற்பவர் கம்பர்தான். கற்பனைத் திறமா, அதில் கம்பன் கவிஞரில் ஓங்கிய தலைஞன். நாடக அணியா, அதில்

அவன் நிகரற்றவன். இப்படியே வளமார் சந்தமா, சுவை நயமா, பொருள் ஆழமா, தத்துவச் செறிவா, இலக்கண முறையா, அரசியல் ஞானமா, இயற்கை வருணனையா- எதை எடுத்தாலும் அவையனைத்தி லும் முறை போகியவன் கம்பன். 'கம்பன் கவிதையிற்போல் கற்றோ ருக்கு இதயம் களியாதே' என்று சும்மாவா சொல்லுவார்கள்?

தத்துவ விளக்கம் தருகிறபோது கம்பனை நாம் ஓர் கவிஞனாகவே எண்ணத் தோன்றாது. தலைமைசான்ற தத்துவஞானிதான் அகக் கண்ணிலே தோன்றுவான். அழகை வருணிக்கிற போது பரமரசிகனைத்தான் பார்க்க முடியுமே தவிர, கம்பன் என்ற கவி தெரியமாட்டான். அரசியல் நீதி புகலும்போது பெரும் அரசியல் ஞானிதான் தோன்றுவான். நக ரத்தை வருணிக்கிறபோது பெரிய கட்டிடக் கலை நிபுணரும், அரிய பொறியியல் நிபுணருமே தெரிவார் கள். மரயானையில் மரத்தைப் பார்க் கிறவர்களுக்கு மரம் மட்டுமேயும் யானையைப் பார்க்கிறவர்களுக்கு யானையே தெரிவது போலவும்தான் கம்பனை ரசிகனாகப் பார்க்கிறவர் களுக்கு அவன் பரம ரசிகன்; வீர னாகப் பார்க்கிறவர்களுக்கு அவன் பெருவீரன்; ஞானியர்க்கு அவன் ஞானஒளி; கவிஞர்களுக்கு அவன் கவிச் சக்கரவர்த்தி. அந்தச் சக்கர வர்த்தியின் கருவூலத்திலிருந்து ஒரு சில மணிகளை நாம் பார்க்கலாமா?

* * * *

அரக்கர் பாவமும் அல்லவர் இயற் றிய அறமும் துரக்க கேகயன் பயந்த நங்கை நல்லருள் துறக்கும் நாடகம் நிகழ்கிறது. இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல் தோன்றிய கூனி சிறிது சிறிதாக 'இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ?' என்று இறுமாந்து கேட்ட 'ஆழ்ந்த பேரன்பினா'ளான கைகேயி யின் மனத்துக்குள்ளே ஒரு விரிசலை —எரிமலை வெடிப்பதற்கு முன்னே உள்ளே சில மாறுதல்கள் நிகழுவது போல—ஏற்படுத்திவிடுகிறாள். 'இராம னைப் பயந்த'வள் 'என் மகன்' என்று பரதனைப் பேசத்தலைப்படுகிறாள். அப் போது கேட்கிறாள்.

''மயில்முறைக் குலத்துரிமையை,
மனுமுதல் மரபை
செயிர் உற, புலைச்சிந்தையால்,
என் சொனாய்?''

(அயோ-மந்தரை சூழ்ச்சி-71)

அரச பரம்பரையின் வாரிசு மூத்த குமாரனுக்கே என்ற மனுவின் காலத்து மரபை மாற்ற உன் சிறு புத்தியால் நினைக்கிறாயே என்று கேட்க வந்த கைகேயி 'மயில் முறைக் குலத்துரிமை'யை மாற்றலாமா என் றும் கேட்கிறாள். அதென்ன மயில் முறைக் குலத்துரிமை? அவள் பிறந்த கேகய நாடு, மயில்கள் நிறைந்த நாடு. அவர்களுடைய குலத்துக்கு உரிமை-வாரிசுச் சட்டம்-'மயில்முறை ப்படியாம் என்று பேசுகிறாள். மயில் முறை என்ன என்று தெரியவேண்டு மானால் மயில்களைப் பற்றித் தெரிந் திருக்க வேணும். மயில்களுக்குள்ளே ஆண் மயில், பெண் மயில் உண் டென்ற சாதாரண உண்மையை நாம் அறிவோம். ஆனால், சில மயில் களுக்கு தலையில் கொண்டை இருக் கும். அவை எவை?

ஆண் மயில்கள்தான் கொண்டை யுடையவை என்றாலும், எல்லா ஆண் மயில்களுக்கும் கொண்டை இருக் காது. முதல் ஆண் குஞ்சுக்கே தலை யில் உயர்ந்த கொண்டை இருக்கு மாம். 'கலாவம் புனைந்த களிமயில் மூத்தது என' தணிகைப் புராணத் திலே ஒரு குறிப்பு கிடைக்கிறது இதற்கு. இன்றைய விலங்கியல் நிபுணர்கள் இதை ஒப்புகிறார்கள். இதைத்தான் 'கல்வியிற் பெரிய

கம்பன்' அன்றே சொல்லுகிறான் 'மயில்முறை' என்று. மயில் முறைக் குலத்துரிமை என்பதற்கு கேகய நாட்டையே மயில் நாடு என்று அழைக்கப்படும் வழக்காறு உண்டாதலால், கேகய நாட்டு அரசுரிமை முறை என்று சிலர் உரைக்கலாம். ஆனால், அப்பொருள் சிறப்புடையதன்று என கம்பனில் பலகாலும் பயில்பவர்கள் அறிவார்கள். கம்பனுக்கு மயிலைப் பற்றித் தெரிந்திருக்க வேணும். ஆண் மயிலைப்பற்றியும் தெரிந்திருக்க வேணும், அதிலும் கொண்டையுடைய மயிலே மூத்தது; அதுவே முறைமையுடையது என்பதுமான மிக நுண்மையான விலங்கினத்து உண்மையையும் அறிந்திருக்க வேணும். இல்லையேல் சாதாரணமாக யாரும் அறிந்திராத இந்த அசாதாரணமான நுட்பமான பொருளை கைகேயியை வைத்துப் பேசியிருக்க முடியாது. இராமனே மூத்தவன், அவனே அவனுடைய புகுந்த வீட்டு மனுதர்ம முறைப்படியும், பிறந்த வீட்டு—கேகய நாட்டு—மயில் முறைப்படியும், பட்டஞ் சூடிக் கொள்ள உரிமையை உடையவன் என்றும் கைகேயியின் மனத்திலே இருந்த எண்ணத்தைக் கம்பன் அழகாக வெளிப்படுத்துகிறான். அரசரில் பிறந்து அரசரில் வளர்ந்து அரசரில் புகுந்து பேரரசியானவள் கைகேயி. பிறந்த இடத்து மரபையும் புகுந்த இடத்து மரபையும் விட்டுக்கொடுக்க எண்ணாதவளாகக் கைகேயி இருந்த நிலைமையை எடுத்துக் காட்ட கம்பன் சொல்லுகிற மயில் முறை நயம் பன்முறை துய்த்து உணர வேண்டியதொன்றாகும்.

* * *

திருமால் அன்று தன் நெடுமையால் அளந்த உலகையெல்லாம், தன் மனத்தே நினைந்து செய்த கொடுமையால் அளந்த பெருமையுடைய கைகேயியின் சொற்கொண்டு இராமன் வனம்புகப் புறப்படுகின்றான். தன்னுடன் கூட வருவேன் என்ற இலக்குவனைத் தடுத்து நிறுத்துகிறான் இராமன். இலக்குவன் இதற்கு ஒப்பாது தன் வேண்டுகோளை வலியுறுத்திச் சொல்கிறான்.

> "நீர்உள எனின் உள, மீனும்
> நீலமும், நானும் சீதையும்
> ஆர்உளர் எனின் உளேம்?
> அருளுவாய்!"
>
> (அயோ-நகர்நீங்கு-152)

நீரைவிட்டுப் பிரியாத, பிரிந்தால் உயிர் தரியாத வஸ்துக்கள் இரண்டு. அவை மீனும், நீலோற்பல மலருமாகும். தண்ணீரினின்று தரையில் போட்டால் உயிர் தரிக்காத மீனைத் தனக்குவமையாகவும், நீரை விட்டுப் பறித்தவுடன் வாடிவிடும் நீலமலரைச் சீதையாகவும் இலக்குவன் பேசுவதாகக் காட்டுகிறான் கம்பன். இது ஏதோ சாதாரண விவாதப் பேச்சோ, அல்லது வெறும் உவமையாகவோ தோன்றவில்லை. கம்பன் தன் காவியக் கோவிலில் விமானத்தின் உச்சியிலிருக்கும் சிற்பத்தையும் சரி, வாயிற்படியாய்க் கிடக்கும் கல்லையும் சரி கலையழகும் காவிய நயமும் மிளிரவே படைக்கின்றான். இங்கேயும் அவன் தனது விலங்கியல் அறிவையும், தாவரவியல் ஞானத்தையும் காட்டுகிறான். எத்தனையோ ஜீவராசிகளுள் இமையே இல்லாத ஒன்று மீனாகும். ஆம், மீன்களுக்கு இமை கிடையாது. பின்னாலே வனத்திலே பதினான்கு ஆண்டுகள் கண் இமைக்காது, தூங்காமல் இராமனைக் காக்கப் போகிறான் இலக்குவன். அதனாலே 'இமைப்பிலன் நயனம்', 'துஞ்சலில் நயனத்தான்' எனறெல்லாம் பாராட்டுப் பெறப்போகிறான். அப்படிப்பட்டவனுக்கு உவமையாகக் கூற இமையே இல்லாத, இமைக்க முடியாத நயனங்களை உடைய மீனைக் கூறியது எவ்வளவு பொருத்தம்? அது மட்டுமா? நீரிலே இருக்கிற அழுக்கு,

கழிவுப் பொருள்கள் இவைகளை உண்டே வாழும் மீன. அதேபோல் இராமன் உண்ட எச்சில் கனி, கிழங்குகள், மிச்சம் மீதியையே உண்டு பின்னே வனத்திலே வாழப் போகிறவன் இலக்குவன். அந்த வகையிலும் உவமைகூற மீனே சாலப் பொருத்தம். கம்பன் சைவனே அன்றி அசைவனே என்று நாம் அறியோம். என்றாலும் சாதாரணமாக நாம் யாரும் பார்க்கும்படியான ஒரு ஜீவ ராசி மீன். அதில் நாம் யாரும் கவனிக்கத் தவறும் ஒரு நுண்மை யான விலங்கியல் சிறப்பை வைத்துக் கொண்டு ஒரு பாத்திரத்தின குண நலத்தையே விளக்கிட்டுக் காட்டக் கூடியவன் கம்பன் ஒருவன் தான். இப்படி ஒரு சாதாரண மீனைப் பற்றி மட்டுமா, காணக்கிட்ட வராத ஒன்றையும் கமபன் தன் கலையழ கோடு விளக்குவான். சிறிய மீனுக் கடுத்து, பெரிய கழுகையும் பார்க்க லாம்.

* * * *

சிற்றிடைச் சீதையுடனும், இளவலுடனும் இராமன் வனம் புகுகின்றான். அவர்கள் மூவரும் நடந்து வருவதைத் தூரத்தே மலை முகட்டிலிருந்து கொண்டு புள்ளினத்து வேந்தன் ஜடாயு கவனிக்கிறான். கம்பன காப்பியத்தில் ஜடாயு அறிமுகமாகிற இடம். இதோ கம்பனின் அறிமுகம்.

'தூய்மையன், இருங்கலை
துணிந்த கேள்வியன்
வாய்மையன், மறுஇலன்,
மதியின் கூர்மையன்,
ஆய்மையின் மந்திரத்து
அறிஞன ஆம் எனச்
செய்மையின் நோக்குறு
சிறு கணன் தனை'

(ஆரணிய-சடாயுகாண்—5)

சடாயுவின் குணநலன்களை விவரிக்கப்புகுந்த கம்பன் கல்வி கேள்வி களிற் சிறந்த, குற்றமற்ற, கூர்த்த மதிவலியும், வரும்பொருளுரைக்கும் ஆர்த்த அமைச்சியல் அறிஞனுமாகிய சடாயு தூரத்தை நோக்கியிருக்கிற சிறு கண்களையுடையவன் என்கிறான். சிறு கண்ணினாலே தூரக் காட்சியைப் பார்க்க முடியுமா? கம்பன் எவ் வார்த்தையையும் தேவையின்றிப் பிர யோகிக்கிறவன் இல்லை. 'சிறு' கணன் என்பதில் ஏதோ மறைபொருள் இருக்கவேண்டும். இல்லையேல்'சேய்மை' என்ற அழுத்தம் கொடுத்து 'சிறு' கண்ணன் என்ற பிரயோகம் செய்ய மாட்டான

'அவனுக்குக் கழுகுக் கண்' என்று வழக்காறறுச் சொல இதன் பொருளை அறிய வைக்க உதவும். இதன் பொருள் பெரிய கண்களையுடையவன் என்றுதான நாம் நினைத்து வருகிறோம். அது சரியன்று. கழுகுக்கு இரண்டு விதமான கண்கள் ஒவ்வொரு கண்ணுக்குள்ளும் உண்டு. ஒன்று வெளியில் அமைந்துள்ள, நம் கண்களுக்குத் தெரிகிற பகுதி. இன்னொன்று உள்ளே நடுவிலே அமைந்திருக்கின்ற பகுதி. வெளிக் கண்ணிலே அண்மைப் பார்வையும், உள் கண்ணிலே சேய்மைப் பார்வையும் உண்டு. இந்தக் கண் அமைப்பு கழுகுக்கு ஆண்டவன் கொடுத்த இயற்கையாகும். இரையைத் தேடிப் பறக்கும்போது வெளிக்கண் அதன் பறக்கும அண்மைச சுற்றுப்புறச் சூழலைக் காட்டும. உட்கண் (Telescopic eyes என்று இதனை விலங்கியல் சாத்திரம கூறும்) தூரத்தே தெரியும் இரையின்மீது பதிந்து அதனைக் குறி வைத்துச் செல்ல உதவும். ஏனெனில் வெளிக் கண்ணில் இரையைப் பதிய வைத்துக் கொள்ள அதற்கு தூரக் காட்சிப் பார்வையும் கிடையாது. அப்படிப் பதித்தாலும், பறப்பதற்கு இடைஞ்சலாகும்.

உதாரணமாக நாம் நடந்து போகும் போது சாலை முழுமையும் பாராது

ஒரு குறிப்பிட்ட விளக்குக் கம்பத்தையே பார்த்துக் கொண்டு நடப்பதாக வைத்துக்கொள்வோம். இடையே வரும் பொருள் எவையும் நம் பார்வையில் படாது. நாமும் விளக்கை அடையமாட்டோம். இடையிலேயே எதன்மீதாவது முட்டிக்கொள்ளக் கூடும்—ஏனெனில் நம் பார்வை வேறொரு பொருள்மீது பதிந்திருப்பதால்.

ஆகவே ஒரு கண்ணை அதாவது சிறிய உட்கண்ணை—இரையினமீது பதித்து, பெரிய கண்ணால் அண்மைக காட்சியைக் கடந்து பறந்து செலல உதவவே ஆண்டவன் அப்படிப் படைத்திருக்கிறான். இதனையெலலாம் அறிந்தவன் கமபன். அதனால்தான் தூரத்தே வருகின்ற இராம-இலக்குவர்கள்மீது சடாயு சிறு கண்ணால் (Telescopic eyes) பார்வையைப் பதித்து அவர்கள் யார் என்று அறிய முயல்கிறான் என்று கம்பன் அமைக்கிறான். இப்போது கழுகுக் கண என்ற வழக்கும் பொருந்தும். அதாவது எவ்வளவு தொலைவில் நடந்தாலும் கழுகுப் பார்வைபோல அறியமுடிகிறவன என்ற பொருள் நயம்படும். கழுகு பார்க்கின்றபோது, அதன உடற்கூறு நுண்மையை எல்லாம் கற்றுத் தெரிந்திருந்த காரணத்தினால்தான், கம்பன 'சிறு கண்' எனற பிரயோகம் செய்கிறான்.

* * * *

உள்ளதை உள்ளபடி சொல்வதினும், உள்ளதை உணர்ந்தபடி சொல்ல வல்லதே கவிதைக்கலை. அப்படியானால் கம்பன் இந்த விலங்கியல் சாத்திர அறிவையெல்லாம் வெறுமனே கற்றவன், கற்று அறிந்தவன் மட்டுமல்லன்; அவற்றை உணர்ந்து அறிந்தவனும்கூட. இப்போது சொல்லுங்கள். கம்பன் இவையெல்லாம் எப்படி அறிந்தான்? இதற்கு நம்மால் கூறமுடிந்த ஒரே பதில் 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்பதுதான்.

இலங்கை நகரைப்பற்றிச் சொல்ல வந்த கம்பன் பேசுவான், 'இங்கேயுள்ள மாளிகைகள் பொன்னைக் கொண்டு இழைத்தனவா, மணி கொண்டு பொதிந்தனவா, மின்னால் செய்யப்பட்டவையா, இல்லை இல்லை எதைக் கொண்டு இயற்றியது என்று இனனும் கண்டுபிடிக்காத ஒரு வஸ்துவைககொண்டு கட்டியதா?' என்று; அப்படி 'என் கொண்டு இயற்றிய எனத் தெரிகிலாத' என்று அவனைப் போலவே நாமும அவன் மேதாவிலாசத்தைப்பற்றிக் கையை விரிக்கத்தான வேண்டியுள்ளது. கவிதைக் கலையிலும் இலக்கியக் கலையிலும் மட்டும் கமபன் கற்றுத் துறைபோகியவன் அல்லன். அறிவியற் கலையிலும் நுணுக்கமான அறிவு நிரம்பப் பெற்றவன். இலலையேல், ஒரு ஆகாய விமானம் பறக்கும் முன் முதலில் தரையில் ஊர்ந்து பிறகு 'Take off' எடுத்துத்தான் பறக்கும் எனறு இராவணன் சீதையைக் கொண்டேகுகிற காலததே சொல்ல முடியுமா? அயோமுகியாம் அரக்கியின் கைப்பட்ட இலக்குவனைக் காணாது திகைததுத் தேடும் இராமன் பாட்டரி விளக்கு போன்ற அமர்ந்து எரியும் விசையுடைய விளக்கோடு தேடியதாகக் கம்பனால் சொல்ல முடியுமா? இராம-இராவணப் போரில் வரும் எண்ணற்ற அஸ்திரங்கள், படைக்கலங்கள், ஏவுகணைகள் இவைகளின் ரூபத்திலே இன்றைய அழிவுக் கருவிகளைப் படம் பிடித்துக் காட்ட முடியுமா? அதனாலேதான் மெய்ஞ்ஞானமும் விஞ்ஞானமும் ஒருசேர

அறிவும் அநுபவமும் உடையவனுன கம்பன் கழுகைப்பற்றிப் பேசும் போது கழுகாகவே நினைவூட்டுவான். அவற்றுக்கு உடல் மட்டும் இன்னும் விலங்கு உலக மூலமே என்று காட்டத் தனக்குத் தெரிந்த விலங்கியல் சாத்திர அறிவை மிகத் தெளிவாகக் காட்டுகிறுன் கம்பன். ஆகவேதான் அவை இன்றைக்கும் பொருந்துகின்றன. பொருள் சிறந்து காலச் சூழலிலே எதிர் நீச்சல் போட்டு மேலே வந்திருக்கின்றன. இதைத்தான் கம்பரசிகர் திலகமாம் மகராஜன் அவர்கள்—ஆம், கம்பனை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து மேம்படுத்திய கனம் நீதிபதியவர்கள் தான்—தமக்கே உரித்தான அழுத்தந் திருத்தமான ஆங்கில நடையில் சொல்லுவார்கள்.

"Kamban can never become out of date, because he speaks to us and to the whole world with the Voice of Tomorrow"

இன்றைய தலைமுறையினராகிய நமக்கு, நேற்றைய தலைமுறையினனை கம்பன், நாளைய தலைமுறை அறிவோடு பேசுவதினுலே அவன் கடந்த காலத்தினன் அல்லன்; காலங் கடந்தவன் ஆவான். கம்பன் அறிவுடையவன் மட்டுமல்லன்; எல்லாம் உடையவன் மட்டுமல்லன்; 'எல்லா அறிவுடையாரிலும் எல்லாம் உடையவன்' என்று சொல்லத் தோன்றுகிறதல்லவா?

# ஸ்ரீராம் திட்டமிட்ட சேமிப்பு
# நாளைய உங்கள் பராமரிப்பு!

## உங்கள் வருமானத்திற்கு ஏற்ற சீட்டுகள்.
## ரூ.2,000 முதல் ரூ.1,00,000 வரை.

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் உங்கள் பொருளாதாரத்தின் பாதுகாவலன், பல வகைகளில் உதவும் உறுதுணை.

### சிறப்பு அம்சங்கள்:

- 24% வருமானம்
- சீட்டு எடுத்தவுடன் சீக்கிரத்தில் தொகை
- ஏல உச்சவரம்பு கிடையாது. ஆயினும் 30% மேல் தள்ளி ஏலம் எடுப்பவர் 'உத்தரவாதத் தொகை' செலுத்தவேண்டும்
- ஏலங்களின் விதிமுறைகள் பொறுப்புள்ள நபர்கள் பங்கு கொள்ள வழி செய்கிறது.

ADWAVE/SCI/351






### ஸ்ரீராம் பைனான்ஸ்

ஸ்ரீராம் சிட்ஸுக்கு நிதி உதவி புரிவோர்.

- ஸ்ரீராம் பைனான்ஸ் பொதுமக்களிடமிருந்து பிக்ஸட் டிபாஸிட்டுகளை ஏற்றுக் கொள்கிறது.

பிக்ஸட் டிபாஸிட் வட்டி விகிதம்:

- 1 வருடம் 12½%
- 2 வருடங்களுக்கு மேல் 14%
- 3 வருடங்களுக்கு மேல் 15%
- 4 வருடங்களுக்கு மேல் 16%

குறைந்தபட்ச டிபாஸிட் தொகை ரூ. 1000/- ஆகும். ரூ. 5000/-க்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு பிரதி மாதமும் வட்டி அளிக்கப்படுகிறது.

அறக் கட்டளைகள், தர்ம ஸ்தாபனங்கள், கல்வி நிலையங்கள் இவைகளின் முதலீட்டுக்கு 1% கூடுதல் வட்டி உண்டு.

உங்கள் வசதிக்குத் தகுந்தவாறு, ஒரு வருடத்திற்குக் குறையாமல் 'ரெக்கரிங் டிபாஸிட்டுகள்' ஏற்றுக் கொள்ளப்படும்.

ரூ. 100/-,மற்றும் அதன் பெருக்குத் தொகைகளுக்கு 5 வருட 'கேஷ் ஸர்ட்டிபிகேட்டுகள்' அளிக்கப் படுகின்றன. இதில் உங்கள் முதலீடு 5 வருடங்களில் இரட்டிப்பாகிறது.

மேற்கொண்டு விவரங்களுக்கு:

**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்**

266, அங்கப்ப நாய்க்கன் தெரு,
சென்னை-600001. போன்: 28545

**Shriram**
Chits & Investments
Private Limited

266, Angappa Naicken Street,
Madras-600001. Phone: 28545

# INDEX TO ADVERTISERS

## நன்றி.....

இக் கம்பன் விழா மலரை மணம் விரி மலராகப் படைப்பதற்குக் கட்டுரையாக்கி உதவிய அறிஞர்களுக்கும், விளம்பரங்கள் நல்கி உதவிய நிறுவனங்களுக்கும், அன்பர்களுக்கும், அழகுற அச்சிட்டு உதவிய ஹோரா அண்டு கம்பெனி உடைமையாளர் திரு வி. சேதுராம் அவர்கட்கும், பல்வகையானும் பணியாற்றிய அனைவருக்கும் மனம் கனிய, நா இனிக்க, வாய் மணக்க நன்றி பல நவில்கிறோம்.

அன்பன்

**கி. மு. அழகர்சாமி**

செயலாளர்

**கம்பன் கழகம்**

சென்னை

*14–8–1976*

